

கலை இலக்கியத் திங்களிதழ்

# கணையாழி

மலர் : 58 இதழ் : 09 டிசம்பர் 2023 விலை ரூ.25/-









## பாறைகள் சரியும் காலம்!
## மானுடம் நிமிரும் காலம்!! – ம.ரா.



## கணையாழி மின்னிதழ் சந்தா விவரம்

தனி இதழ் ரூ 25

ஓராண்டு சந்தா ரூ 275

சந்தா செலுத்துபவர்களுக்கு மின்னிதழ் அனுப்பப்படும்.

இணையத்தில் வாசிக்க அன்புகூர்ந்து
**www.kanaiyazhi.com** அல்லது
**magzter.com** பாருங்கள்..

அச்சு இதழாக வரும் வாய்ப்பு இப்போது இல்லை உங்கள் சந்தாவை மின்னிதழுக்கானதாக மாற்றலாம் அல்லது மீதித் தொகையைத் திருப்பி பெறலாம். உங்கள் விருப்பத்தைத் தெரியப்படுத்தி உதவுங்கள்.. நன்றி.

## மின்னிதழ் சந்தா செலுத்த வங்கி விவரம்

Account Name - KANAIYAZHI,
Account No. -147202000000792
Bank - INDIAN OVERSEAS BANK,
VALMIKI NAGAR BRANCH,
CHENNAI-600 041.
IFSC CODE- IOBA0001472






# கணையாழி

மலர்: 58 இதழ்: 09
டிசம்பர் 2023 விலை ரூ. 25/-

**நிறுவனர்**
கி. கஸ்தூரி ரங்கன்

**சிறப்பாசிரியர்**
இந்திரா பார்த்தசாரதி

**பதிப்பாளர்**
ம. இராசேந்திரன்

**ஆசிரியர்**
மய்திலி ராசேந்திரன்

**நிருவாக ஆசிரியர்**
உ.ரு. அரசவேந்தன்

**துணை ஆசிரியர்**
கவிதைக்காரன் இளங்கோ

**ஆசிரியர் குழு**
மு. ராமசாமி, ட்ராஸ்கி மருது
ஆ.பத்மாவதி, சாந்தி சித்ரா, அ.நாகராசன்

**ஆலோசகர்கள்**
வ. ஜெயதேவன்
ரெ. பாலகிருஷ்ணன்
சு. சங்கரவடிவேலு
நா. சுவாமிநாதன்
தமன் பிரகாஷ்
கவிதா சொக்கலிங்கம்

**அயலக ஆலோசகர்கள்**
எம்.ஏ. முஸ்தபா (சிங்கப்பூர்)
கார்த்திகா பார்த்திபன் (கனடா)

**ஊக்கத்துணை**
தென்றல் கருணாகரன்
தென்னரசி பிச்சைமணி
எழில் சாலமன், இரா. உலகரசி

**இதழ் வடிவமைப்பு / உதவி ஆசிரியர்**
கோபு ராசுவேல்

Digital Publishing
Dr. Balasundaram, IDEATERICS

**சட்ட ஆலோசகர்**
வழக்கறிஞர் சொ. சந்திரமோகன்

**கணையாழி மின்-இதழ்**
https://kanaiyazhi.net/
http://kanaiyazhi.emagaz.in & www.magzter.com

படைப்புகளை மின்னஞ்சலில் அனுப்புங்கள்

**மெய்ப்பு உதவி**
வேதநாயக்

**கணையாழி**
தொடர்புக்கு : 08220332055
மின்னஞ்சல்: kanaiyazhi2011@gmail.com


உங்களுடன்



# பாறைகள் சரியும் காலம்!
# மானுடம் நிமிரும் காலம்!!

*வடக்கே*
*மண் பாறை சரிவிலிருந்து*
*தொழிலாளர்களின்*
*மீட்டெடுப்பு!*

*இங்கே*
*மனுதர்ம சரிவிலிருந்து*
*மானுடத்தை மீட்டெடுக்க உதவிய*
*மண்டல் நாயகருக்கு*
*மாநிலக் கல்லூரி வளாகத்தில்*
*சிலை திறப்பு!*

*ரிஷிகேஷ், ஹரிதார், கேதார்நாத்,*
*பத்ரிநாத் கங்கோத்ரி, யமுனோத்ரி*
*அடங்கிய தேவ பூமி! என்றெல்லாம்*
*கொண்டாடப்படும்*
*உத்தரகண்ட் சுரங்கப் பாதையில்*
*மண் பாறை சரிவு!*

*உத்தரகண்ட்*
*இந்தியாவின் 27 ஆவது மாநிலம்*
*இமயமலையின் நிலப்பரப்பு!*

*“எல்லா மக்களின் நலன்களையும்*
*பேணுவதைத் தவிர*
*வேறு முக்கிய வேலை எனக்குக் கிடையாது.”*
*என்று உறுதி கூறிய*
*மாமன்னன் அசோகன்*
*கட்டளைக் கல்வெட்டும் இருக்கும் இடம்!*

*அங்கே தான் நடந்திருக்கிறது*
*மண்பாறை நிலச்சரிவு!*
*இது முதல்முறை அல்லவாம்!*
*மண் சரிவு, பாறைச்சரிவு*
*நிலச்சரிவு மட்டுமின்றி*
*பனிச்சரிவும் அங்கே நடக்குமாம்!*

*இரண்டு கிலோ மீட்டர் உயரத்திலிருந்து*
*இமயமலையின் பனிப்பாறை*
*ஒரு நிமிட சரிவில் 2021 இல்*
*பெயர்ந்து விழுந்த வேகம்*
*ஹிரோஷிமா அணுகுண்டு*
*வேகத்தைவிட அதிகமாம்!*

*மோதிய வேகத்தில்*
*ஏற்பட்ட வெப்பத்தில்*
*உருகிப் பெருகி ஓடிவந்த வெள்ளம்*
*அடித்துக் கொண்டு போயிருக்கிறது*
*204 மனிதர்களின் உயிர்களையும்!*
*நல்ல வேளை இப்போது*
*41 தொழிலாளர்களும்*
*காப்பாற்றப்பட்டிருக்கிறார்கள்!*





அவர்கள் காப்பாற்றப்பட்ட செய்தியை
உலகிற்கு முதலில் அறிவித்தவர்
பொறியாளர் சந்திரன் என்ற
தமிழ்நாட்டுக்காரர்!

சுரங்க மண்சரிவில்
சிக்கியிருந்தவர்களில் ஒருவரும்
தமிழ்நாட்டைச் சேர்ந்தவர் இல்லை.

ஆனால் அவர்கள்
உயிரோடு இருக்க
உணவு, குடிநீர், மருந்து, மாத்திரையும்
நம்பிக்கை இழக்காமல் இருக்க
மின்சாரம், மின்னேற்றி, கேமராவும்
உள்ளே அனுப்ப உதவியிருப்பது
திருச்செங்கோட்டில் உள்ள
தரணி ஜியோ டெக் நிறுவனம்!

இப்போது வெளியில் வந்துவிட்டார்கள்!
இங்கிருந்தே சந்திரயானை நிலாவில் இறக்கும்
தொழில்நுட்ப இந்தியாவில்
சுரங்கத்தில் சிக்கிக் கொண்டவர்களைக்
கரையேற்ற 17 நாட்கள்!

ஆயிரம் கிலோ மீட்டருக்கு
அப்பால் உள்ள இடத்தைக் குறிவைத்து
அழிக்க அனுப்பும்
ஏவுகணை தொழில்நுட்பம்
படுகுழியில் சிக்கிக்கொண்ட
தொழிலாளர்களை மீட்டெடுக்கும்
பயன்பாடு எப்போது வரும்?

எப்படியோ வெளிவந்துவிட்டார்கள்!
ஆனாலும் சுரங்கத்திலிருந்து
வெளியில் வந்து விடுகிற மூச்சில்
இன்னும் கூட அவர்களின்
மனச் சரிவின் வெளிப்பாடு!

எவ்வளவு மன உளைச்சலில்
இருந்திருப்பார்கள்?
குடும்பத்தை மீண்டும்
காண முடியுமா? என்ற பதற்றத்தில்
அவர்களின் குடும்பமும்
இருந்திருக்குமே!

துரத்தும் பயத்தில் தூங்க முடியாமல்
நினைவாற்றல் குறைந்து
முடிவெடுக்க முடியால்
இனிவரும் காலங்களையும்
எப்படி நகர்த்தப் போகிறார்கள்?

பயம் இல்லாமல் இரவு வானத்தைப்
பார்க்க முடிய வேண்டும்!
கண் சிமிட்டும் நட்சத்திரங்களும்
சரிந்து விழும் பாறைத்துளிகள் என்று
பதறாமல் இருக்க வேண்டும்!
இயல்பு நிலைக்கு வர இன்னும்
எவ்வளவு காலம் எடுக்கும்?
பயத்திலிருந்து விடுபட-
ஓடி ஒளிய நினைத்தால்
அது விடாது துரத்தும்!

தமிழ்நாட்டு முதல்வரைப் போல
நேருக்கு நேராகச் சந்திக்கத் துணிந்தால்
அது ஓட்டம் பிடிக்கும்!

சந்திக்கத் துணிந்த
மண்டல் நாயகர் வி.பி.சிங். சிலையை
மாண்புமிகு முதலமைச்சர்
திறந்துவைத்திருக்கிறார்!

எதிர்பாரா விபத்தில்
பதினேழு நாட்கள் படுகுழியில் இருந்தவர்கள்
இயல்பு நிலைக்கு வரவே
இவ்வளவு பிரச்சினைகள்!

ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப்
படுகுழியில் கிடத்தப்பட்டிருந்த
மக்கள் மனநிலையை
மாற்றி, மீட்டெடுக்கப் பாடுபட்ட
கலைஞருக்கு,
வடக்கிலிருந்து கைகொடுத்த
வி.பி.சிங் குக்குத்
தமிழகத்தில் சிலை எடுத்து
மானுட நேயத்திற்கு
மகுடம் சூட்டி இருக்கிறார்
தமிழ்நாட்டு முதல்வர்!

மக்களை அச்சுறுத்தும்
அரசாங்கம் மாறி
மக்களுக்கு அஞ்சும்
அரசாங்கம் உருவாகும் காலம் இது!

கால மாற்றத்தில்
இமயமலைப் பாறைகளும்
சரிந்து விழுகின்றன!
ஆனால் தாமதம் ஆனாலும்
பாதகப் படுகுழியிலிருந்து
போராடி வெளிவருகிறது
மானுட நேயம்!

அதன் குறியீடுதான்
மணடல் நாயகர் சிலை திறப்பு!

ஆம்! இது
பாறைகள் சரியும் காலம்!
மானுடம் நிமிரும் காலம்!!

அன்புடன் **ம.ரா.**

# உள்ளடக்கம்

கட்டுரை

அதியன்

# சரம்பல்

மனிதகுலம் தன்னுடைய நீண்ட நெடிய பயணத்தில் மகத்தான கலைப் படைப்புகளையும் காவியங்களையும் அறிவியல் கண்டுபிடிப்புகளையும் நிகழ்த்திக்கொண்டே செல்கிறது. உலகப் பேரியக்கங்களெல்லாம் மனித மாண்புகளையும் விழுமியங்களையும் உயர்த்திப் பிடித்திருக்கின்றன. உலக மதங்கள் எல்லாம் அன்பை அடிப்படையாகக் கொண்டது என்கிறார்கள். படைப்பாற்றலும் எழுத்தாற்றலும், கற்பனை வீச்சுகளுடன் மிகப்பெரிய விஞ்ஞான அறிவும் பெற்றுள்ள மனிதன் ஒரு போர் அரக்கனாக மாற எவ்வாறு முடிகிறது என்பது ஒரு பதிலில்லாத கேள்வி. ஏன் மனித சமுதாயத்தால் போர்களை நிறுத்தவே முடியவில்லை? இதுவும் ஒரு பதிலில்லாத கேள்விதான்.

வரலாற்று ரீதியாக அக்காலப் போர் முறையிலிருந்த ஒருவகையான சமநிலை, இருதரப்பும் களம்கண்டே ஆகவேண்டும் என்ற நிலை, துரதிருஷ்டவசமாக இரண்டாம் உலகப்போருக்குப்பின் மாறியது. வான்வழித் தாக்குதல் முறை போர்களின் தன்மையை மாற்றியது. அழிவுகளின் அளவு அதிகரிக்கத் துவங்கியது. அணுகுண்டு அழிவின் உச்சத்தைத் தொட்டு அதனை அடுத்த தலைமுறைக்கும் நீட்டித்தது. மனிதகுலம் தன்னைப் பார்த்தே அச்சம் அடையத் துவங்கி, மீண்டும் ஒரு உலகப்போர் வந்துவிடக்கூடாது என்று ஐ.நா. சபை உருவாக்கப்பட்டது. ஆனால் இதுவரை ஐ.நா சபை தலையீட்டால் எந்த ஒரு பெரிய போரும் நிறுத்தப்படவே இல்லை.

இரண்டாம் உலகப்போருக்குப் பிறகு நிகழ்ந்த பெரும்பாலான போர்கள் ஐரோப்பாவிற்கும் அமெரிக்காவிற்கும் வெளியேதான் நிகழ்ந்துள்ளன. ஆனால் எல்லாவற்றிலும் அவ்விரு நாடுகளில் ஏதாவதொன்றின் தொடர்பு இருந்திருக்கிறது. போர்கள் வெளிப்படையாக நடத்தப்பட்டாலும் போருக்கான காரணங்கள் வெளிப்படையானதாக இருப்பதில்லை. அது ஒரு தனிக்கதை.

இன்றைய போர்களை வழக்கமான போர் என்பதற்கான புரிந்துகொள்ளப்பட்ட அர்த்தத்திற்குள் கொண்டுவர இயலாது. முழுவதும் தொழில்நுட்ப அறிவை

முன்னிறுத்தி அதனையே ஆயுதமாகக் கொண்டு, வசதியாக ஓர் அறையில் அமர்ந்து ஏவுகணைகள் மூலம் அடுத்த நாட்டினைத் துல்லியமாகத் துவம்சம் செய்யும் முறையினைப் போர் என அழைத்துக்கொள்கிறார்கள். தன்னை ஒரு அறிவார்ந்த சமுதாயம் என்று அழைத்துக்கொள்ளும் ஒரு சமூகம் / நாடு, எந்தவிதமான நெருடலுமின்றி இந்த அழிவை இருபத்துதொன்றாம் நூற்றாண்டில் நிகழ்த்திக்கொண்டிருக்க முடிகிறது. மதம், அரசியல், பொருளாதாரம், அறிவியல் தொழில்நுட்பச் சார்புகள், வரலாற்றுக் காரணங்கள் என பலவற்றைக் கற்பித்துக்கொண்டு இதற்கு இதரநாடுகள் துணைபோகும் அவலமும் நடந்தேறி வருகிறது. மனிதம் என்பது மரத்துச் சாம்பலாகிப் போய்விட்ட நிலையில் இதில் முதல் தவறு யாருடையது என்று பேசுபவர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் போய் நின்று தாராளமாகப் பேசிக்கொண்டு இருக்கலாம். இன்று உண்மையில் நடப்பது என்ன? அது அப்படியே தொடர்வது அறமா? அதை கண்டிக்காதிருப்பது நடுநிலைமை என்பதைவிட நபும்சகத்தனம் எனலாம். செயத்தக்க செய்யாமை யானும் கெடும் என்பது வள்ளுவன் வாக்கு. அந்தக் குற்றத்தைத்தான் இழைக்கின்றன பல நாடுகளும்.

குரலற்ற நாடுகள் என்றால், பலமற்ற தேசங்கள் என்றால், உன் மதம் எனக்குப் பிடிக்கவில்லை என்றால், உன் கோட்பாடுகளில் எனக்கு உடன்பாடில்லை என்றால், உன் நாட்டு மக்கள் எல்லாம் கொல்லப்படலாம் என்பதுதான் இன்றைய சிந்தாந்தம் என்றால், இதுதானா இக்கட்டுரையின் முதல் வரிகளில் நாம் சிலாகித்தவற்றின் இலட்சணம்? ■



கவிதை

கவிஜி

# கரையோரம் அமர்ந்திருக்கிறேன்

இசைக்கு தகுந்த வெற்றிடம்
எங்கும் உண்டு
இலையாகிப் பார்

உருண்ட நினைவுகள்
மருண்ட வட்டக்கண்
பாறையெனினும் புன்முறுவல்

செக்கச் சிவந்த வானத்தில்
பச்சை மஞ்சள் சிவப்பென
பார்வைக்கும் புதுப் பாதை

மனதின் கனவை
மரங்கொத்தி கலைக்கட்டும்
மற்றொரு கனவுக்கு மரமேங்கும்

நிகழ்ந்திட தோன்றுவது
நேற்றைக் கூட
இன்றாக்கி இருந்தது

கரையோரம் அமர்ந்திருக்கிறேன்
காற்று வாக்கில்
என்னை நிறைக்கும் நான்

chevijay80@gmail.com ■



சிறுகதை

ம.ரா.

# புதைகுழி!

புதைகுழியில் வைத்தது எங்கே போயிருக்கும்? நினைவுகள் இருக்கு. ஆனால்...

கண்ணில் பொட்டுத் தூக்கம் இல்லை. பெரிய திண்ணையில் எப்போதும் தலை வைத்துப் படுக்கிற மேடு இப்போது உறுத்துகிறது. தலையை மேட்டிலிருந்து இறக்கிக் குப்புறப் படுத்தான். பாய்க் கோரையில் அழுக்கு வாசனை. திரும்பிப் படுத்தான். ஒரு நிலையில் படுக்க முடியவில்லை. புரண்டு படுத்தான்.

அப்படியும் தூக்கம் வரவில்லை. எப்போது விடியும் என்றும் தெரியவில்லை. தூக்கம் வராதபோதும் கனவு வருகிறது. கனவுக்குள் போய் தூங்கலாம் என்று நினைத்துக் கொண்டிருந்த போதே விழிப்பு வந்து விடுகிறது. மீண்டும் ஒருமுறை முயற்சி செய்யலாமா?

அமாவாசையில் கதகதவென்று இரவில் அடுப்பில் எரிகிற நெருப்பு நெருங்கிப் போனால் அவிந்து போகிறது. சாமியாடி புதையல் இருக்கு என்று சொல்லிவிட்டுப் போன பின்பு அமாவாசையில் தூங்க முடியவில்லை. புதையலைப் பார்க்க ஊரே கூடி விடுகிறது.

புதையலைப் பூதம் காவல் காக்கிறது என்றும் பூதத்துக்குக் காவு கொடுத்தால்தான் புதையல் கண்ணுக்குத் தெரியும் என்றும் சொல்லிவிட்டுப் போன சாமியாடியை ஒரு அமாவாசை இரவில் ஊரே கூடி உட்கார வைத்தது. விளக்கு இல்லாமல் இருட்டில் முகம் பார்க்காமல் பேசாமல் புதையலுக்காக மக்கள் காத்திருந்து பார்த்தார்கள்.

மாமாவுக்கு இப்போது புதையல் வரக்கூடாது என்றே இருந்தது. அதில் எவ்வளவு இருக்கோ? இத்தனை பேருக்கும் பங்கு போட்டால் தனக்கு எவ்வளவு கிடைக்குமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருந்தார்.

எழுந்து உட்கார்ந்தான். விடிவிளக்கு நின்றபடியே தூங்கிக் கொண்டிருந்தது. எரவானத்திலிருந்து தொங்கிய சாக்குப் படுதாவில் ஈரம் தெரிந்தது. குளிர் காலத்தில் வீடே இரவில் போர்த்திக்கொள்ளும். விலக்கி வெளியே பார்த்தான். பனி கொட்டிக்

கொண்டிருந்தது. ஊதைக் காற்று முகத்தில் அடித்தது. கை விரல்கள் சில்லிட்டன. அவசரமாகச் சாக்குப் படுதாவை விட்டுவிட்டுப் படுத்தான். பக்கத்தில் படுத்திருந்த மாமா சத்தத்தில் திரும்பிப் படுத்தார். ஒருவேளை பனிக்காற்று மாமாவை எழுப்பி இருக்கும். இடுப்பு வேட்டியைப் போர்வையாக்கி, தலைக்கும் காலுக்கும் இழுபறி நடத்திக் கொண்டிருந்தார். இவ்வளவுக்கும் தூக்கம் கலைந்ததாகத் தெரியவில்லை. ஒருவேளை மாமாவுக்கும் தூக்கம் வரவில்லையோ? அவருக்கு மட்டும் எப்படித் தூக்கம் வரும். மாமா புரண்டு படுத்தார்.

புதைகுழியில் வைத்ததே மாமாதானே. அவசரப்பட்டு விட்டோம் என்று மாமா இப்போது கவலைப்படலாம். ஆனாலும் என்ன செய்ய முடியும்?

மாமா திரும்பிப் படுத்தார். வழக்கமாக இந்நேரம் குறட்டை வந்திருக்கும். ஆனால் இப்போது சத்தம் இல்லை. சத்தம் இல்லாமல் தூங்க மாமாவால் முடியாது. நடுத்தூக்கத்தில் எழுந்து வெற்றிலை பாக்கு போட்டுப் புகையிலை அடக்கித் துப்பிவிட்டுத்தான் படுப்பார். சாக்குப் படுதாவுக்குள் வீடு மூடிக் கிடக்கும்போது அவருடைய புகையிலை கடைவாயில் ஒதுங்கிக்கொள்ளும். ஆனால் இப்போது அவர் மூச்சுக் காற்றில் வெளியேறுகிறது புகையிலையின் காரம். ஆனாலும் மாமா தூங்குவது போலப் படுத்திருந்தார். மாமாவை எழுப்பலாமா என்று ஒண்ணுக்குப் போகப் போவதுபோலப் போய்ப் பார்க்கலாமா என்று யோசித்தான். மாமா ஒன்றும் தப்பாக நினைக்க மாட்டார். எப்படியாவது கிடைத்தால் சந்தோஷப்படுவார். சத்தம் இல்லாமல் எழுந்தான்.

அமாவாசை இருட்டைப் பனி பூசிக்கொண்டிருந்தது. அமாவாசையில் புதைகுழி திறந்து ஆவிகளும் வெளிவரும் என்று அம்மா எப்போதோ சொன்னது நினைவுக்கு வந்தது. குழியைத் தேடினான்.

புதைகுழி காணாமல் போயிருந்தது. இவ்வளவுக்கும் வைத்துப் புதைத்த இடத்தை யாரும் பார்த்துவிடக் கூடாது என்று பழைய மாதிரியே மண்போட்டு மூடிவிட்டு அவருக்கு மட்டும் அடையாளம் தெரிய கும்பகோணத்தான் பூண்டுச்செடியை மாமா நட்டு வைத்தாரே. அடுத்தநாள் கூட அவன் பார்த்தபோது பூண்டுச்செடி இலை சுருண்டு வாடி நின்றதே.

கிடைத்ததை வீட்டில் வைத்திருக்காமல் தெரு ஓரத்தில் புதைக்க நினைத்தது தவறாகப் போய்விட்டது. வீட்டைச் சோதனை போட்டால் குடும்பமே சிறைக்குப் போக வேண்டி இருக்குமென்று ஊர்க் கணக்குப்பிள்ளை பயமுறுத்தாமல் இருந்திருந்தால் இப்படி நடந்திருக்காது.

யாருக்குத் தெரியும்? இப்படி நடக்கும் என்று. வீடு கட்ட பின்புறம் இருந்த கோயில் நிலத்தில், மண் வெட்டிய போதுதான் அது நடந்தது. வெட்டிய மண்வெட்டி டங்க் என்று வாய் மடங்கிய போதுதான் தெரிந்தது. வேலை செய்தவர்கள் பயந்து போட்ட கூச்சலில் எல்லோரும் கூடிவிட்டார்கள். ஒவ்வொன்றாய் எடுத்து வெளியில் வைத்தார்கள்.

வெட்டிய பள்ளத்தைச் சுற்றிலும் பெண்கள் சூழ்ந்து கொண்டார்கள். தோசைக்கல் மாதிரி சந்தனம் அரைக்கும் வட்ட வடிவமான வெள்ளைக் கல்; ஒரு சாண் அளவில் வகைவகையான உலோக விக்கிரகங்கள். விக்கிரகங்கள் மண் படிந்து பசிய நிறங்கொண்டு களிம்பேறி இருந்தன.

என்ன இது புதையல் மாதிரி இருக்கு; இன்னும் தோண்டுங்க. தங்கக் காசு பானை கிடைச்சாலும் கிடைக்கும். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ராமாயி சொன்னதும் கூடி இருந்தவர்கள் நெருக்கினார்கள். பள்ளத்தின் ஓரம் சரிந்து

உள்ளே மண் விழுந்தது. வெட்டிக் கொண்டிருந்தவர் மேலே பார்த்து முறைத்தார். முதுகில் வியர்வை கோடு போட்டுக்கொண்டிருந்தது.

விக்கிரகங்கள் தங்கமாக இருக்குமோ? ஒரு நிமிடம் மாமாவின் கடன்கள் எல்லாம் நினைவுக்குள் வந்தன. வரும்காலத்துக்குக் கடவுள் காட்டியிருக்கும் வழி என்று நினைத்துக்கொண்டார். முருகா என்று எல்லோருக்கும் கேட்கும் படியாகக் கூப்பிட்டுக் கண்ணில் தெரிந்த நாகநாத சாமி கோபுரத்தைக் கும்பிட்டார்.

கூட்டம் கூடிக்கொண்டிருந்தது. என்னவாக இருந்தாலும் இவ்வளவு பேரை வைத்துக்கொண்டு இந்த விக்கிரகங்களை எடுத்துக்கொண்டு வீட்டுக்குப் போக முடியாது. வேலை செய்கிறவர்களையும் இப்போது வீட்டுக்கு அனுப்ப முடியாது.

“என்ன சிலை எல்லாம் தங்கமா இருக்குமோ?”

சொல்லிக்கொண்டே ஒரு சிலையை எடுத்து சூரிய வெளிச்சத்தில் பார்த்தது பக்கத்து வீட்டு அலமேலு.

மாமா அவசரமாக அதை அலமேலுவிடம் வாங்கிப் புரட்டிப் புரட்டிப் பார்த்தது. எல்லோரும் மாமாவைப் பார்த்தனர்.

அந்த ஊரில் மாமா கொஞ்சம் விவரமானவர். கையில் கடிகாரம் இல்லாமலே நேரம் சொல்லக் கூடியவர். யாருக்கேனும் குழந்தை இரவில் பிறந்தால், வந்து நேரம் கேட்பார்கள். தூங்கிக் கொண்டிருக்கும் மாமா வீட்டுக்கு வெளியே வந்து வானத்தை ஒருமுறை உற்றுப் பார்த்துவிட்டு நேரம் சொல்லக் கூடியவர். பாம்புப் பஞ்சாங்கம் பார்த்து ராசி பலன் சொல்வார். பல்லி சொல்லுக்குப் பலன் சொல்வார். தலையில் பல்லி விழுந்துவிட்டது என்ன செய்வது என்று ஆலோசனை சொல்வார்.

“அதெல்லாம் ஒண்ணும் இல்ல. கொலு பொம்மைகள் அவ்வளவுதான். விளையாட்டு பொம்மைகள்.”

உலோகச் சிலைகளிடமிருந்து கூட்டத்தின் கவனத்தை மாற்ற மாமா முயன்று கொண்டிருந்தார். ஆனால் மாமாவின் உள்மனம், சிலைகளின் மதிப்பைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தது.

“விளையாட்டுப் பொம்மையா? அப்படின்னா என் பேரனுக்கு ஒண்ணு எடுத்துக்கிறேன்”

கிடக்கிற சிலைகளில் பெரிதான ஒன்றை அலமேலு எடுத்துக்கொள்ள, கூட்டத்தில் இருந்தவர்கள் முண்டியடித்துக்கொண்டு ஆளுக்கொரு சிலையைக் கையில் எடுத்துக் கொண்டனர்.

“இருங்க!... இருங்க...! மண்வெட்டி, கண்டுபிடிச்சது நாங்க. எங்களுக்கும் ஆளுக்கொரு பொம்மை கொடுங்க!”

வேலை செய்த ஆட்கள் மண்வெட்டியைப் போட்டுவிட்டுப் பொம்மையைப் பிடுங்க நெருங்கினர். மாமாவுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

“வேணும்கிறவங்க எடுத்துகிட்டுப் போங்க. ஆனால் ஒண்ணு! இந்தப் பொம்மை இருக்கிற வீட்டில கறி, மீன் சமைக்கவோ, சாப்பிடவோ கூடாது. வீட்டிலே குளிச்சு முழுகிற - தூரம் வரும் பொம்பளைங்க, பொம்மை இருக்கிற பக்கம் போகக் கூடாது. புரட்டாசி மாதம் மாதிரி வருஷம் பூரா வீட்டை வச்சிருக்கிறவங்க எடுத்துகிட்டுப் போங்க. அப்பறம் பொம்மைக்கு ஆசைப்பட்டு, சீக்குல விழுந்திடாதீங்க! சொல்லிப்புட்டேன்.”

மாமாவின் குரல் வழக்கத்தைவிட சத்தமாக இருந்தது.

“அய்யய்யோ! அப்படின்னா எனக்கு வேணாம்.”

அலமேலு சிலையை எடுத்த இடத்தில்

வைத்ததும் எல்லோரும் சிலையை வைத்துவிட்டு அங்கிருந்த பள்ளத்துத் தண்ணீரில் கையைக் கழுவிவிட்டு இடத்தைக் காலி செய்தனர்.

"சரி... மீதி வேலையை நாளைக்குப் பார்த்துக்குவோம். உங்களுக்கு யாருக்காவது பொம்மை வேணுமா?"

வேலையாட்களுக்குச் சம்பளம் கொடுத்துக்கொண்டே, மாமா கேட்டது.

"இல்லண்ணன்."

வேலையாட்களும் அப்படியே போட்டுவிட்டுப் புறப்பட்டுப் போனார்கள். அப்போதுதான் சின்ன மாமா அங்கே வேகமாக வந்து சேர்ந்தது.

"என்னண்ணே இவ்வளவுதானா? ஏதோ நூறு இருநூறு சிலைன்னு சொன்னாங்க?"

"யாருடா சொன்னா?"

இங்க வேலை செஞ்ச ஆளுங்க, டீ கடையில சொல்லிக்கிட்டு இருந்தாங்க. அதான் நான் வேகமாக வந்தேன்.

"சரி, போயி சாக்கு எடுத்துகிட்டு வா!"

சின்ன மாமா கொண்டுவந்த சாக்குப் பையில் சந்தனக் கல் சிலைகள் எல்லாவற்றையும் எடுத்து வைத்து வீட்டுக்குக் கொண்டு வந்தார்கள்.

கேள்விப்பட்டு விசாரிக்க வந்தவர்களிடம் மாமா கதை சொல்லி அனுப்பிக் கொண்டிருந்தார். வருகிறவர்களிடமிருந்து தப்பிக்க சீக்கிரமே சாப்பிட்டுவிட்டு, விளக்கை அணைத்துவிட்டுப் படுத்தனர்.

ஆனாலும் மாமாவும் சின்ன மாமாவும் தூங்கவில்லை. ஊர் அசமடங்கியதும் வீட்டுக்குள் போய் சாக்குப்பையைப் பிரித்துச் சிலைகளை எடுத்து விளக்கு வெளிச்சத்தில் பார்த்தனர். என்ன செம்பா? தங்கமா? தெரியவில்லை.

"தங்கமாகத்தான் இருக்கும் இல்லன்னா ஏன் புதைக்கிறாங்க?"

சின்ன மாமாவை மெதுவாகப் பேசச் சொல்லி மாமா சைகை செய்தது.

வீட்டில் இருந்த தோசைத்திருப்பியால் ஒரு சிலையை எடுத்து அதன் மீதிருந்த மண்ணைச் சுரண்டிப் பார்த்த சின்ன மாமாவின் முகத்தில் சந்தோஷம் வழிந்தது. ஆனாலும் உறுதியாகச் சொல்ல முடியவில்லை.

"எதற்கும் கழனிப் பானையிலே போட்டு வைப்போம். காலையிலே பார்ப்போம். களிம்பு போனால் நல்லாத் தெரியும்"

சொல்லிக்கொண்டே கழுநீர்ப் பானைக்குள் சிலைகளைப் போடப் போனது சின்ன மாமா.

"ஏய்!... இரு!... இரு...! எல்லாத்தையும் போடாத! இரண்டு சிலையை மட்டும் போடு. மத்தது இருக்கட்டும்."

பெரிய மாமாவிடம் ஏதோ திட்டம் இருப்பதாகச் சின்ன மாமா நினைத்தது. கேள்வி கேட்டால் பெரிய மாமாவுக்குப் பிடிக்காது. சின்ன மாமா இரண்டு சிலைகளை மட்டும் எடுத்துக்கொண்டு போய்க் கழனிப் பானைத் தண்ணீருக்குள் வைத்தது. மீதியை எடுத்து மறுபடியும் ஒவ்வொன்றாகப் பார்த்தார்கள்.

பெரிய மாமா எழுந்து வீட்டுக்கு வெளியே வந்து வாசலில் நின்று வானத்தை ஒருமுறை நோட்டம் விட்டது. நட்சத்திரங்கள் மேகத்துக்குள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. பிறகு ஒழுங்கைக்கு வந்து இருபுறமும் பார்த்தது. ஊர் நல்ல உறக்கத்தில் இருந்தது. சின்ன மாமாவும் வெளியே வந்தது.

மாட்டுக் கொட்டகை எரவானத்தில் தொங்கிக்கொண்டிருந்த மண்வெட்டியை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு எதிர்ப் பக்கம் இருக்கும் ஒழுங்கையின் ஓரத்திற்குச் சென்று சத்தம் இல்லாமல் புதைகுழி வெட்டியது. யாராவது வருகிறார்களா? என்று நோட்டமிட்டுக் கொண்டிருந்த,

சின்ன மாமாவைச் சிலைகளை எடுத்துவர மாமா சைகை செய்தது.

சந்தனக்கல், பூஜை மணி தவிர மீதமிருந்த சிலைகளைச் சாக்குப் பையோடு அப்படியே புதைகுழிக்குள் வைத்து மண் மூடினர். புதுமண் தெரியாமல் இருக்க அதன்மேல் கும்பகோணத்தான் பூண்டுச் செடிகளை வேரோடு பிடுங்கி நட்டனர். எங்கேயோ கோழி கூவுகிற சத்தம் வந்தது. மாட்டுக் கொட்டகையில் மண்வெட்டியை வைத்துவிட்டு, அவசர அவசரமாக வீட்டுக்குள் சென்றனர். இரவும் பகலுமாகப் புதைகுழியைக் கண்காணித்துக் கொண்டிருந்தனர்.

இரண்டாவது நாள் கணக்கப்பிள்ளை, மணியக்காரர், தாசில்தார், போலீசு என்று வரிசையாக வந்துவிட்டார்கள். மாமாவை விசாரித்தார்கள். இரண்டு சிலைகளும் சந்தனக் கல்லும் பூஜை மணியும் தான் இருந்தன என்று மாமா சொல்வதை நம்பாமல் வீட்டைச் சோதனை செய்தார்கள். மாமாவே கழனிப் பானைக்குள் இருந்த இரண்டு சிலைகளையும் எடுத்துக் காட்டியது. வேலையாட்கள் நிறைய சிலைகள் இருந்ததாகச் சொன்னார்கள். கூட்டம் கூடியது.

“அப்படியா? நான் வந்தப்ப என் கிட்டே காட்டுனது இவ்வளவுதாங்க. நிறைய இருந்துதுன்னா.. அவங்கதான் வச்சிருக்கணும். அவங்களைக் கூப்பிட்டுகிட்டுப் போயி விசாரிங்க சார்.”

மாமா அப்படிச் சொல்லும் என்று அவர்கள் எதிர்பார்க்கவில்லை. கூப்பிட்டுப் போய் விசாரிப்பது என்றால் எப்படி இருக்கும் என்பது அவர்களுக்குத் தெரியும்.

“இல்லை... நிறைய இருந்தது மாதிரி தெரிஞ்சுது. அதுக்குள்ள கூட்டம் கூடிப் போச்சு.”

வேலையாட்கள் தப்பிக்க முயன்றார்கள்.

“அப்படின்னா! வந்த கூட்டம் எடுத்துகிட்டுப் போச்சுன்னு சொல்றீங்களா? அப்போ அவங்களையும் விசாரிங்க!”

மாமா எப்போதும் இப்படித்தான். உள்ளுக்குள் பயமிருக்கும் போது துணிச்சலாகப் பேசுவார். கணக்கப் பிள்ளையைத் தாசில்தார் பார்த்தார்.

“அந்த இடத்துல இன்னும் கொஞ்சம் வெட்டிப் பார்ப்போம். இந்த இரண்டு சிலைகளையும் எடுத்துகிட்டுப் போயி என்ன உலோகம்னு பார்ப்போம். அப்பறம் தேவைப்பட்டா இவங்களைக் கூப்புட்டுக்குவோம்.”

புதையல் இருந்த இடத்தைச் சுற்றிலும் காவல் வேலி போட்டுவிட்டு அதற்குள் மேலும் பள்ளமாக வெட்டிப் பார்த்தார்கள். வேறொன்றும் கிடைக்கவில்லை.

மாமா கொடுத்ததை எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். அன்று இரவும் தூக்கம் இல்லை.

அதிகாரிகளிடமிருந்தும் தகவல் இல்லை. இடையே மழை பெய்தது; புயல் அடித்தது. சின்ன மாமாவும் பெரிய மாமாவும் கவலை குறைந்து வெளியூருக்கெல்லாம் போனார்கள்.

புதைகுழியின் மீது புல் வளர்ந்து கிடந்தது. கும்பகோணத்தான் பூண்டுகள் கிளைத்துப் பூத்துக் கிடந்தன. புதையலை ஊரே மறந்திருந்த ஒரு அமாவாசை நள்ளிரவில் சின்ன மாமாவும் பெரிய மாமாவும் புதைகுழியைத் தோண்டினார்கள். சாக்கில் மண்வெட்டி சதக் என்றது. மண்வெட்டியை வைத்துவிட்டுச் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு மெதுவாகக் குழியிலிருந்து எடுத்தார்கள்..

வெறும் சாக்குப் பைதான் இருந்தது!

kanaiyazhi2011@gmail.com ■



கவிதை
கிளாரல் எஸ்டீவ்ஸ்
தமிழில்: வ. ஜெயதேவன்

# நட்சத்திரங்கள் பேச முடிந்தால்

தென்றல் பாட்டிசைக்க,
முழுநிலா ஒளிரும் இரவொன்றில்
தரிசு மேட்டில் அமைதியான இடத்தில்
நடைப்பயிற்சிக்கு அழைக்க விழைகிறேன் உன்னை.
என் இதயத்தில் ஓர் அமைதியற்ற துடிப்பு பரவுகிறது!
என் நம்பிக்கைக்குரியவர்களை நினைக்கும்போது -
நட்சத்திரங்கள்.
அவை பேச முடிந்தால்,
அவை பேசுவதை நீ கேட்க முடிந்தால்
அவை என்ன சொல்லும்?
உன்மீது எனக்குள்ள அன்பும்
என் உள்ளத்தில் நீயன்றி எவரும் இல்லை என்பதும்
அவற்றுக்குத் தெரியும்.
நட்சத்திரங்கள் பேச முடிந்தால் மட்டுமே
நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று சொல்லும்.
என்னைக் காதலிக்கும்படி
உன்னையும் அவை கேட்கும்.

vjdeva@gmail.com ■





கட்டுரை
கவிதைக்காரன் இளங்கோ

# வெயிலெனத் திரிகிறது நதி நடந்த பாதை

## கூழாங்கல் திரைப்படத்தை முன்வைத்து

**(திரைமொழிப் பார்வை)**

பி. எஸ்.வினோத்ராஜ் கூழாங்கல் எனும் தனது முதல் திரைப்படத்தை இயக்கியிருக்கிறார். இப்படத்திற்கு இரண்டு ஒளிப்பதிவாளர்கள். ஒருவர் விக்னேஷ் குமுளை இன்னொருவர் ஜெய பார்த்திபன். இருவரும் இயக்குனரின் திரைக்கதைக்காக இரண்டு கண்களாகச் செயல்பட்டிருக்கிறார்கள். காட்சிவழி கதைசொல்லலான சினிமாவின் அடிப்படையைத் திறம்பட நிறைவேற்றிக் கொடுத்திருக்கிறார்கள். யுவன் ஷங்கர் ராஜாவின் பின்னணி இசை படத்தின் எண்பது சதவீதப் பகுதிகளில் இசைக்காமல் பாங்காற்றியிருக்கிறது. அது முக்கியமான ஒரு விஷயம். எங்கெல்லாம் பின்னணி இசை அமைக்கப்பட்டுள்ளதோ அங்கெல்லாம் திரைக்கதையின் அழுத்தத்தை உணர்த்த வேண்டிய காட்சிக்காக அதற்குரிய தேவையை சரியான அளவில் வழங்கியிருக்கிறது. Silence is the big harmony for a visual என்பார்களே அது நிகழ்ந்திருக்கிறது. அதனை நம்மால் உணரமுடிகிறது.

அதுபோலவே, 'லைவ் சவுண்ட்' ஆக படம் நெடுக ஒலிக்கும் சிறு சப்தமுமாகட்டும் வசனங்களைக் கதாபாத்திரங்கள் பிரயோகப்படுத்துகின்ற அளவாகட்டும் கனக்கச்சிதமாகப் பொருந்தியுள்ளன. அனைத்தும் சேர்ந்து சர்வநிச்சயமாக ஒரு திரையரங்க அனுபவத்தைக் கோருகிற திரைப்படம்.

முதன்மையாக, இத்திரைப்படம் 2021 பிப்ரவரி மாதம் நான்காம் தேதி வெளியாகியது. பின்னர் ஐம்பதிற்கும் மேலான திரைப்பட விழாக்களில் கலந்துகொண்டு பரந்துபட்ட உலக சினிமா பார்வையாளர்களின் கவனத்தைப் பெற்றுள்ளது. அதில் முக்கியமாக, நெதர்லேண்ட் தேசத்தில் நடந்த ஐம்பதாவது இண்டர்நேஷனல் ஃபிலிம் ஃபெஸ்டிவெல் ரோட்டர்டாமில் சிறந்த திரைப்படத்திற்கான 'புலி விருது' பெற்றிருக்கிறது. அதே போல 2022 ஆஸ்கர் விருது போட்டியில் இடம்பெறுவதற்காக இந்திய சினிமா பிரிவின் சார்பில் தேர்வாகி ஆஸ்கர் விருதின் வெளிநாட்டுப் படங்கள் பட்டியலில் இடம்பெற்றது. ஆனால் அங்கு நாமினேட் ஆகவில்லை. கூழாங்கல் திரைப்படம் சமீபத்தில் சோனி லைவ் ஓ.டி.டி தளத்தில் அக்டோபர் 2023-ல் பொதுமக்கள்

பார்வைக்கு வெளியாகி பரவலான கவனத்தை மீண்டும் ஈட்டியுள்ளது.

கதைச்சுருக்கம்:

குடிகாரனாக மாறிப்போன ஒரு கணவன். அவனிடம் கோபித்துக்கொண்டு பெண் குழந்தையோடு தாய்வீட்டிற்குப் போய்விட்ட மனைவி. அவளைக் கையோடு கூப்பிட்டுவர ஆத்திரத்துடன் கிளம்புகிறான் அவன். போகும்வழியில் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருக்கும் மகனை பாதி வகுப்பிலிருந்து கிளப்பிக்கொண்டு தன்னோடு அழைத்துப் போகிறான். தந்தை, மகன் இருவருக்குமான பயணம்தான் முழுத் திரைப்படம். சிறுகதைக்குரிய இதன் கச்சிதத்தை திரைக்கதைக்குள் கொண்டுவந்து ஒன்றேகால் மணிநேர சினிமாவாக வார்த்திருக்கிறார் இயக்குனர்.

தென்தமிழகத்தில், நிலத்தடிநீர் குறைந்து விவசாயம் பொய்த்துப்போன ஒரு வறண்ட நிலப்பரப்பில் படம்பிடிக்கப்பட்டுள்ளது. சரியாகச் சொல்வதென்றால் வானம் பார்த்த பூமி. ஒரு பகல்நேரத்தின் உச்சிவெயில் பொழுதும் அதில் தகிக்கும் வெக்கையும் ஒவ்வொரு காட்சியிலும் அனலாக அலைகிறது. கதையினூடாக பார்வையாளன் உணரவேண்டிய கதாபாத்திரங்களுடைய உறவுத்தன்மையின் அளவு கைக்கு அடக்கமாக உள்ளது. கணபதி, சாந்தி, வேல், லட்சுமி என்கிற சிறிய குடும்ப அமைப்பு அது. ஓர் ஊரிலிருந்து பக்கத்து ஊருக்கான பயணத் தொலைவே கதை நிகழும் பொழுதின் அளவும்.

'உனக்கு என்னைய புடிக்குமா? உன் ஆத்தாளப் புடிக்குமாடா?' என்று மகனைப் பார்த்துக் கடுப்புடன் கேட்கும் கணபதியின் கேள்வியிலிருந்து தொடங்குகிறது கதைச்சூழலுக்கான காரணம்.

முகம் முழுவதும் சினந்து மேலும் கறுத்துப்போய் கொதிநிலையில் இருக்கும் மண்டைச் சூட்டை தன் எண்ணத்தில் தேக்கிவைத்துக்கொண்டு பீடியை ஊதித்தள்ளும் கணபதியின் தோற்றம் கோபக்கார குடிகார நடுத்தர வயதுள்ள தறுதலையான தகப்பனைப் பிரதிபலிக்கிறது.

மூன்று அல்லது நான்காம் வகுப்பு படிக்கும் கணபதியின் மகன் வேல், கதை நெடுகப் படுகின்ற பாடும் அடையும் மன அவஸ்தையும், ஒன்றிரண்டு உணர்ச்சிகளை முகத்திலும் உடல்மொழியிலும் அவ்வப்போது வெளிப்படுத்தும் விதத்திலும் ஒன்று புரிந்துவிடுகிறது. நாம் திரையில் பார்த்துக்கொண்டிருப்பது அவர்கள் வாழ்க்கையில் நடக்கிற முதல் ஒற்றைச் சம்பவத்தை அல்ல.

அச்சிறுவனின் முகத்தில் தென்படுகிற இறுக்கமும் அத்தகப்பனின் முகத்திலிருக்கிற இறுக்கமும் ஒரே மனநிலையின் எதிரெதிர் முனைகளில் நின்றபடி ஒன்றையொன்று முறைத்துக்கொண்டிருக்கின்றன. கணபதிக்கு மகனை எப்படிக் கையாள்வது என்பது தெரிந்திருக்கிறது. அதுவேதான் மகனுக்கும். ஆனால், அதில் சிறிய வித்தியாசம் இருக்கவே செய்யும் என்பதே காலக்கணக்கு. அந்த வித்தியாசம் திரைக்கதையில் நீரோட்டமாக வெளிப்பட்டிருப்பதை பார்வையாளர் புரிந்துகொள்ள முடியும்.

வாழ்வின் வளர்முகம் அவ்வாறுதான் இருந்தாக வேண்டும். முளைத்தது வளரும், வளர்ந்தது முதிரும். இருவேறு பருவநிலை மற்றும் காலநிலை இரண்டின் விளைவாக அது உள்ளது. மற்றபடி மனித சுபாவத்தை தீர்மானிப்பது இதுதான் என்று ஒற்றைத் தன்மையில் எதனையும் வரையறை செய்துவிட முடியாது. The survival of the fittest என்று எதனைச் சுட்டுகிறோம்? உயிர் ஆதாரத்திற்கு உரியது தண்ணீர். பின்னர் உணவு. பிறகு



இயற்கையின் கொடையான இன்னபிற. அவை தாராளமாகக் கிடைப்பதற்கும் அரிதானதாக மாறுவதற்கும் நடுவே மனித உயிரும் அவன் அமைத்துக்கொண்ட வாழ்வின் கட்டமைப்பும் ஊடாடுகின்றன.

அவை போக, வலியது எஞ்சும்.

இப்படியான புரிதலுக்கு, வாழ்வின் பலவிதமான போக்குகளைப் பற்றிய ஒரு பொதுப்பார்வையை முன்னரே அடைந்திருப்பது அவசியம் என்று கருதுகிறேன். அதற்கான குறுக்குவழி இலக்கிய வகைமை மற்றும் உலக சினிமாவினூடே கிட்டக்கூடிய அனுபவமாக இருக்கலாம்.

வாழ்வின் எந்தப் பகுதியையும் ஒரு கணிதச் சமன்பாடு போல அறுதியிட்டு கோடு கிழித்துக் காட்டிவிட முடியாது. வாய்ப்புகளையொட்டியுள்ள அனுமானங்களுக்கும் யூகங்களுக்குமான சந்தர்ப்பங்களை உருவாக்கியே பழக்கப்படுத்தியிருக்கிறோம். அடுத்த நொடியில் நிகழலாம் என்கிற அதிசயத்தின்மீது, அதிர்ச்சியின்மீது குறைந்தபட்ச நம்பிக்கையைப் பேண வேண்டிய ஒரு முரணியக்கக் கட்டாயத்தை, சமூக ஏற்பாடுகள் என்பதாகவும் குடும்ப அமைப்புகளின் உதாரண மாதிரி வழியாகவும் கட்டமைத்துக் கொண்டுள்ளோம். அதனை ஒரு சாமானியன் ஒப்புக்கொண்டு இயங்கிக்கொண்டிருக்கிறான். அப்படியான நம்பிக்கைகள் மட்டுமேதான் மனித வாழ்வுக்கான இயங்கு சக்தியோ என்றும் நினைக்க வைக்கிற அளவிற்கான செய்திகள் இந்தப் பூமியில் ஏராளம். தரவுகளாக, வரலாறாக, ஆய்வின் வழியே ஆவணப்படுத்தப்பட்டிருக்கும் அதுபோன்ற அனுமானங்கள் ஏராளம். இவை அனைத்தும் முன்னிறுத்தும் பரிந்துரை ஒன்றுதான்.

இத்தனைத் தொலைவு வந்துவிட்டாய் அல்லவா, இன்னும்கூட முன்னேறு. நம்பிக்கைக்கொள்.

**கூழாங்கல்** திரைக்கதையின் மாந்தர்கள் அந்த வறண்ட பூமியை விட்டுவிடவில்லை. அந்நிலமும் மிகக்கொடூரமாக அவர்களைத் தன்னகத்தே கெட்டியாகப் பிடித்து வைத்திருக்கிறது. இன்னும் கூட மிச்சமிருக்கிற ஈரத்தை ஆழமான ஊற்றின் வழியே கொஞ்சங்கொஞ்சமாகக் கசியவிடுவதை நிறுத்தவில்லை. அந்தக் குறைந்தபட்ச நீராதாரத்தைத் தேடியபடி பெண்கள் மட்டுமே அலைந்து திரிகிறார்கள். ஒரு காட்சியில் அவர்களும் பிளாஸ்டிக் குடங்களும் வெயிலில் காய்ந்தபடி தங்களை நிரப்பிக்கொள்ளக்

காத்திருப்பதை படம்பிடித்த விதம் நம்மைப் பேச்சற்று போகச் செய்கிறது.

கணவன் மனைவி சண்டைகளுக்கு நடுவே அவர்கள் பெற்றெடுத்த குழந்தைகள் இருக்கிறார்கள். அவர்கள் வெறும் குழந்தைகள் கிடையாதே. அடுத்தத் தலைமுறையல்லவா? எந்தவிதமான வாழ்க்கை மாதிரியை அவர்களின் கண்முன்னே நிகழ்த்திக் கட்டுகிறோம்? அவர்கள் நம்மிடமிருந்து பின்பற்ற வேண்டியவையோ கைவிடப்பட வேண்டியவையோ எவை? உழைக்கும் மனிதன் தன் குடும்பத்திற்கு என ஈட்டி வரும் பொருளும் சேமிப்பும் தடையில்லாமல் கிடைக்க வேண்டியது ஒரு பக்கம் என்றால் அன்பும் அரணும் அதன்பொருட்டு சுரக்க வேண்டிய உணர்வும் உணர்ச்சிகளும் இன்னொரு பக்கம். இதன் ஊடாட்டத்தில் வெளிப்படுகின்ற அன்றாட செயல்களினால் விளைபவை அத்தனையும் பாடம், அனுபவம். பிறர் நமக்குத் தருவதும் நாம் பிறருக்குத் தருவதும் அவ்வாறே.

இந்தச் சுழற்சியை வைத்துப் பார்க்கும்போது, உழைப்பிலிருந்து வெளியேறும் மனிதனின் நிலை மோசமான விளைவுகளை ஏற்படுத்தும். அதற்கு ஊர்ப்பட்ட உதாரணங்கள், செய்திகள், இலக்கியங்கள் நம்மிடம் உள்ளன.

கூழாங்கல் திரைக்கதையின் மையக் கதாபாத்திரமான கணபதி மேலோட்டமாகப் பார்ப்பதற்கு உழைப்பிலிருந்து வெளியேறிவனாகத் தெரிகிறான். ஆனால் அது எப்போதிலிருந்து? அவன் மது குடிக்கிறான். ஆனால், குடிகாரனாக விழுந்து கிடப்பதில்லை. அது அவனுக்குத் தேவையாக இருக்கிறது. அது ஏன்? பாழ்மண்டபத்தில் சீட்டாடிக் கொண்டிருக்கும் கும்பலில் ஒருவனிடமிருந்து உரிமையோடு அதட்டி பணம் வாங்கிக்கொண்டு வருகிறான். உழைப்பற்றவன் என்றால் அந்தப் பணத்தை எப்படித் திருப்பித் தருவான்? அவனை நம்பி இன்னொருவன் உடனே எப்படிப் பணத்தைத் தூக்கிக் கொடுப்பான்? அந்த ஒருவன் கணபதியின் சொந்தக்காரனா? உழைப்புக் கூட்டாளியா? இவனை அவன் நம்புகிறானே.. அது ஏன்? பேருந்து நிறுத்தத்தை ஒட்டி இருக்கிற சிறிய பெட்டிக்கடைக்காரருக்கு கணபதியையும் அவனுடைய குடும்பத்தையும் நன்கு தெரிந்திருக்கிறது. பேருந்து ஓட்டுனர் வரை இதெல்லாம் பழகிய விஷயமாக இருக்கிறது. அவர்களுக்கு இது எதுவுமே புதிது அல்ல. ஒரு காட்சியில் கணபதியின் மகன், தகப்பன் தன்னிடம் கொடுத்து வைத்திருக்கும் ரூபாய் தாள்களைக் கிழித்துப் போட்டுவிட்டு ஓடுகிறான். ஏன்? அது எப்படி முடியும்? அப்படியென்றால் அவர்களின் பொருளாதார நிலை என்ன? பொருளீட்டும் உழைப்பின் அடிப்படை என்ன? இதுபோன்ற அத்தனைக் கேள்விகளுக்கான விடையும் நம்மிடமே விடப்பட்டிருக்கிறது.

ஒரு சாமானியனின் பெருவாழ்வை சிறிய கதைக்குள் பொதித்துக் கொடுத்திருக்கும் திரைக்கதையின் வடிவமைப்புக்குள்ளேயே அவற்றுக்கான விடைகளை நாமாகவே அனுமானித்து அடையாளங் கண்டுகொள்ளும்படியான சந்தர்ப்பங்களை இந்தக் கூழாங்கல் திரை அனுபவமாக பார்வையாளர்களுக்கு வழங்குகிறது.

சினிமாவில் இரண்டு முக்கியமான விஷயங்கள் உள்ளன. அவை எந்தத் திரைக்கதை வடிவமாக இருந்தாலும் கவனமாகவே கையாளப்பட வேண்டியவை. The Real Time & The Cinema Time.

வாழ்வை பிரதி செய்வதுதான் கதை. அதனுள்ளே நிஜ வாழ்வின் நிமிடங்களை, மணிநேரங்களை அப்படியே ஒரு திரைக்கதையின் தேவைக்கேற்ப கையாள்வது கடினம். ஆனால், அதுதான்

சவாலுமே கூட. பொதுவாக, மொத்த சினிமாவும் திரையில் ஓட வாய்ப்புள்ள அளவு அதிகபட்சம் மூன்றுமணி நேரம்தான். அதற்குமேல் பார்வையாளன் தாங்கமாட்டான். அவனுடைய அன்றாடத்தின் இருபத்திநான்கு மணி நேரத்திலிருந்து ஒரு சினிமாவைப் பார்ப்பதற்கு செலவிடுகிற அந்நேரம் சாதாரணமான ஒன்றல்ல. ஆகவே, Real Time-ஐ Cinema Time-ஆக மடக்குவதற்கு பல உத்திகள் கண்டுபிடிக்கப்பட்டு அவையெல்லாம் திரைக்கதை மற்றும் படத்தொகுப்பு வடிவிற்குள் ஏற்கனவே பயன்படுத்தப்படுகின்றன.

கூழாங்கல் திரைப்படத்தில், கணபதியும் மகனும் காலை பத்தரை மணி சிற்றுந்துக்காகக் காத்திருக்கிறார்கள். உச்சிவேளையான மதிய உணவை கணபதி இறுதியில் சாப்பிடுவதோடு திரைக்கதை முடிந்துவிடுகிறது. மிஞ்சிப்போனால் அவனுடைய ஒரு பகல்பொழுதின் மூன்று மணிநேர கால அளவு கதைக்குள் கையாளப்பட்டிருக்கிறது. அதுவும் தன் ஊரிலிருந்து சிற்றுந்து ஏறினால் அரைமணி நேரப் பயணத்திற்குள் மனைவியின் ஊரை, வீட்டை அடைந்துவிடும் தொலைவு. அங்கே போய் ஒரு பெரிய ரகளை நடந்து முடிந்து மீண்டும் சொந்த ஊருக்குத் திரும்புவதற்காக அடுத்த சிற்றுந்துக்காக காத்து நிற்கும் நேரத்தில் சிறுவன் வேல் செய்யும் ஒரு காரியம் அல்லது எடுக்கின்ற முடிவு அவர்களின் வீடு திரும்ப வேண்டிய நேரத்தை மேலும் இரண்டு மணிநேரமாக நீடித்துவிடுகிறது.

அதுவே கூழாங்கல்லுக்கான இக்கதையைத் தரப்போகின்ற அவர்களது Real Time space.

இரண்டு மையக் கதாபாத்திரத்திங்களின் மூன்று மணிநேர உணர்வுகொந்தளிப்பை ஒன்றேகால் மணிநேர சினிமா திரைக்கதையாக வடிவமைத்து அதனை Real Time-லிருந்து Cinema Time-க்குள் மடக்கிய கெட்டிக்காரத்தனம்தான் இயக்குனரின் தொழில் நேர்த்திக்கான ஆதார உழைப்பு. இத்திரைக்கதைக்கு ஏற்ற ஒளிப்பதிவைத் திறம்பட கையாள்வதற்கு தெளிவான ஓர் அகன்ற பார்வையும் நுணுக்கமான ஆழ்ந்த பார்வையும் ஒருங்கே இணைந்து தேவைப்படுகின்றன.

லேண்ட்ஸ்கேப் எனக் குறிப்பிடுகிற நிலக்காட்சி என்பது அடிப்படையிலேயே ஒளிப்பதிவில் முக்கியமான அம்சமாகும். ஒளிப்பதிவு படைப்பின் ஓர் அங்கம் என்றாகும்போது கண்ணுக்குக் கிடைத்ததை எல்லாம் நிலக்காட்சியின் கணக்கில் அள்ளிப் போட்டுக்கொள்ள முடியாது. கூடாது. அதற்கு பிரத்யேகமாக ஓர் அர்த்தம் வேண்டும். அந்த அர்த்தத்தைக் கறாராகக் கோரும் பொறுப்பு திரைக்கதையைச் சார்ந்தது. மனித இனத்தின் வாழ்வைப் பதிவு செய்யும்போது ஒரு காட்சி சட்டகத்திற்குள் எதெல்லாம் எப்படியெல்லாம் அடங்குகின்றன என்பதை வைத்துத்தான் அதன் முக்கியத்துவம் பார்வையாளனைப் போய்ச்சேரும். ஒரு திரைக்கதை வெறும் காட்சிவடிவ ஆவணமாகி எஞ்சிவிடாமல், அதன்வழியே ஒரு வாழ்வை கதை வடிவில் சொல்ல முற்படும்போது எழும் சவால்தான் அதற்கென எழுதப்படுகிற கதை மாந்தர்கள்.

அக்கதை மாந்தர்களை மேலும் நெருங்கிப்போய் ஆழ்ந்து நுணுக்கமாகக் காட்டுவதும் ஒளிப்பதிவின் பணிதான். அதற்கும் திரைக்கதையமைப்பு அச்சந்தர்ப்பத்தை உருவாக்கியிருக்க வேண்டும். கேமராவைத் தூக்கிகொண்டு ஒரு பொருளை அல்லது இயற்கையின் ஓர் அம்சத்தை நெருங்கிச் சென்று பெரிதுபடுத்தி திரையில் காட்டப்படுகிற அழகு வெறும் அழகு மட்டுமே. அதுவொரு தொழில்நுட்பக் கொடை. ஒளிவடிவு. அவ்வளவுதான். ஆனால் அப்படி நெருங்கிச் சென்று

காட்டப்படும்போது ஒரு பொருள்மீது படிந்திருக்கின்ற, இயற்கையின் அம்சத்தின்மீது படர்ந்திருக்கின்ற பிரத்யேக அர்த்தம்கொள்ளத்தக்க ஒரு வாழ்வினைத் தொட்டு நின்று அதனையே புதிய அனுபவமாக்கும்போது மட்டுமே அவ்வழகு கவித்துவமடைகிறது. இதற்கு பயனுள்ள உணர்ச்சிக் கொந்தளிப்புகளை உணர்வுகளை வெளிப்படுத்துகின்ற கதைமாந்தர்கள் முக்கியமானவர்களாகிறார்கள். அவர்களே ஒரு சினிமாவை உயிர்ப்புள்ள கலைப்படைப்பாக மாற்றித் தருகின்ற அடிப்படைக் காரணிகள். யதார்த்த வாழ்க்கை என்பதை கலைவடிவின் இணைக்கோடாக பிரதி செய்ய முற்படுவதும் அதனால்தான் என்றும் வரையறுக்கலாம்.

மனைவியின் ஊருக்குள் நுழைந்து அவளுடைய குடும்பத்தாரோடு வாய்த்தகராறில் தொடங்கி மச்சானோடு கைக்கலப்பு வரை நடத்திவிட்டு கிழிந்த சட்டையோடு திரும்பிப் போகும்வரை கணபதியின் வெறுங்கால் நடையில் இருக்கும் விறுவிறுப்பு அசாதாரணமான ஒன்று. அது முழுமையான கோபம், வெறுப்பு எனப் பன்முகக் கொந்தளிப்பு மனநிலையின் வெளிப்பாடு. வெறுமனே ஒரு குடிகாரனின் நடத்தையாக அது இல்லை. அந்த ஒரு காட்சி மிக நீண்ட ஒற்றை ஷாட்டில் படம் பிடிக்கப்பட்டிருக்கிறது. அதில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு துணை நடிகர்களும் தம் நடிப்புத் திறனை திறம்பட வெளிப்படுத்தியுள்ள அழுத்தமான காட்சியுமாகும்.

சிற்றுந்திலிருந்து இறங்கும் கணபதி மகனை மனைவியின் ஊருக்குள் *'நான் சொன்னேன்னு சொல்லிக் கூட்டியா'* என்று அனுப்பி வைக்கிறான். மகன் ஊர்ப்பாதைக்குள் நுழையும்முன்பு அவனை நிறுத்திவைத்து கணபதி கேட்கும்




கேள்வியும் அதற்கு அவன் சொல்லும் பதிலும் இதுதான்..

*'நில்லு.. நான் என்ன சொன்னேன் சொல்லு..?'*

*'ம்மா.. அப்பா ஒன்னிய கூட்டி வரச் சொன்னாரு.. நீ வரலைன்னா இன்னொரு கல்யாணம் பண்ணிக்குவாராம்..'*

*'போய்.. அப்படியே சொல்லு.. போ..'*

அவன் ஊருக்குள் வீதி வழியே நடக்க நடக்க அக்காட்சி நம் கண்முன்னே விரிந்து பெருகுகிறது. அங்கிருந்து தொடங்கும் அந்த ஒற்றை ஷாட் ஒரு Real Time காட்சி. சரியாகப் பத்து நிமிடங்களும் பதினொரு விநாடிகளும் ஒற்றை சிங்கிள் ஷாட்டில் படம்பிடிக்கப்பட்டுள்ளது. அக்காட்சிக்குள்ளே ஒவ்வொரு கதாபாத்திரங்களும் பேசிக்கொள்ளும் விஷயங்கள், அபிப்பிராயங்கள் ஒவ்வொன்றும் வெட்டி ஒட்டவே முடியாத Cinema Time-க்குள் அடங்கிய வாழ்வாக உள்ளது. வேல் அங்கு போகும்போதே அம்மா சாந்தி அங்கே இல்லை. அவள் குழந்தையைத் தூக்கிக்கொண்டு கணவன் ஊருக்குப் போய்விட்டாள் என்கிற செய்திதான் இக்காட்சிக்குரிய செய்திவிளக்கம். மற்றவை எல்லாம் மிச்சத்தை சொல்லாமல் சொல்லும் தன்மையில் எழுதப்பட்டு,

படம்பிடிக்கப்பட்டுள்ளன. அவற்றை நாம் யூகம் செய்துகொள்ள முடியும்.

இந்நிலையில், இயக்குனரின் திரைக்கதை படவோட்டத்தின் அடுத்த அங்கத்திற்கு நகர்ந்தாக வேண்டும். *Real Time*–லிருந்து உணர்ச்சிக் கொந்தளிப்போடு வெளியேறி.. *Cinema Time*–க்குள் நுழைகிற உத்தியாக..

சட்டைக் கிழிய சண்டைப் போட்டு தன்மானம் அடிப்பட்டுப்போய் அடைந்த அவமானம் உச்சியில் நின்று கூடுதலாக எரிந்தபடியும் உள்ளே சற்றுமுன் ராவாக இறங்கியிருக்கும் மதுவின் வீரியமும் கடும்வெயிலும், கையில் சிக்காமல் அடிபடாமல் காலையிலிருந்தே தப்பித்துக்கொண்டிருக்கும் மனைவி மீதான ஆத்திரமும் என அனைத்தும் ஒன்றுகலந்து கணபதியிடமிருந்து வெளிப்படுகிற கடுப்பான வார்த்தைகள் மகன் மீது தெறித்து விழுகிறது.

*'இனி உனக்கு ஆத்தால்லாம் கிடையாது.. அப்பன் மட்டுந்தான்..'*

சிற்றுந்து வரும்போது ஏற வேண்டிய பக்கத்திலிருந்து சாலையைக் கடந்து வேல் எதிர்ப்பக்கம் போய் நிற்கிறான். அந்தச் சரளைக்கல் பாதைவழியாக தொலைவில் தெரியும் மலையைச் சுற்றிக்கொண்டு வீட்டுக்குப் போய்விட முடியும். அப்போது அவன் கண்ணுக்கு அதன் வழியே எத்தனையோ முறை தங்கையைத் தூக்கிக்கொண்டு நடந்தே வந்திருக்கும் தன் அம்மாவின் உருவம் மனதிற்குள் வந்து போகிறது. அவ்வேளை தொலைவில் சிற்றுந்து வருகிறது. கணபதி சாலையோரத்திலிருந்து மகனைப் பார்த்துக் கூவுகிறான். வேல் தன் காற்சட்டைப் பையிலிருந்து ரூபாய்த் தாள்களை வெளியில் எடுத்துக் கிழித்துப் போட்டுவிட்டு மலைப்பாதையை நோக்கி ஒரே ஓட்டமாக ஓடுகிறான். திகைத்துப் பின் சுதாரிக்கும் கணபதி அவனைத் துரத்திக்கொண்டு ஓடுகிறான்.

அந்த ஓட்டமும் நடையுமான பயணத்தில் நாமும் சேர்ந்துகொள்ளும்படியாகிறது. அலையாய் அலையும் அம்மாவின் அலைச்சலுக்கு ஈடாக இந்த ஒரு வெயில்பொழுதில் தகப்பனை அலையவிடுவதில் துணிந்து தண்டனை கொடுப்பது போல உள்ளது மகனின் தீர்மானம்.

திரைக்கதையில் எழுதப்பட்டிருக்கும் ஒவ்வொரு காட்சிப் படிமமும் சொல்லப்படாத வாழ்வின் தொகுப்பைத் தாங்கியபடி ஆங்காங்கே சிதறிக் கிடக்கின்றன. அவற்றைப் போலவே வந்து, கடந்துபோகும் பிற கதாபாத்திரங்களும் வாழ்வின் பெருந்தொகுப்பின் வெவ்வேறு சிறு பகுதிகளைத் துண்டுத்துண்டாக கண்முன் நிகழ்த்திவிட்டுப் போகிறார்கள்.

- சிற்றுந்திலிருந்து பசியில் அழுகின்ற கைக்குழந்தையுடன் நடு பொட்டல் காட்டில் இறங்கிகொள்ளும் ஓர் இளம் தாய். கானல் நீர் அலையலையாக வரியோடிக் கிடக்கும் காய்ந்த நிலப்பரப்பில் ஓர் ஒடைமர நிழலை அண்டி அமர்ந்து குழந்தைக்குப் பால் கொடுக்கிறாள். அக்கணம் குழந்தையைத் தட்டிக்கொடுத்தபடி வறண்ட பூமியை வெறித்துப் பார்க்கும் அவளுடைய பார்வையில் இருக்கும் அர்த்தத்தை நாம்தான் கண்டுபிடித்துக்கொள்ள வேண்டும். அந்நிலத்தில் அவள் வயதையொத்த பெண்கள் வாக்கப்பட நேர்ந்துள்ள வாழ்வின் அவலத்தைத் தவிர அதில் வேறெதுவும் புலப்படவில்லை.
- அவள் மடியில் கிடக்கும் கைக்குழந்தையின் கால் கொலுசும் தாய்ப்பால் பருகியபடியே பசி தீரும் பிஞ்சுப் பாதங்களின் மென்னசைவும்.
- குடத்து நீருடன் சிற்றுந்துக்குள் ஏறும் பெண்மணி. அதற்கும் சேர்த்து

சுமைக்கட்டணக் கணக்கில் சீட்டுக் கிழித்துப் பணத்தை எடுத்துக்கொள்ளும் நடத்துனர்.

- வெவ்வேறு வயதில் வெவ்வேறு மனிதர்களுடன் பயணிக்கும் விதவிதமான பொருட்கள் காட்சியாக்கப்பட்டுள்ளன. அப்பொருட்கள் சுமந்திருக்கும் காரணங்களே அப்பயணச் சுமையும் கூட.

- சுடுமண் சிற்பங்களாகக் கைவிடப்பட்ட சிறுதெய்வங்கள் தம் உருவ அழகை இழந்தும் உடைந்தும் கிடக்கின்றன.

- பட்டுப்போன மரக்கிளைகளில் வேண்டுதலுக்காக முடிச்சிடப்பட்ட துணிக்கந்தைகள் வெயிலில் சாயம் இழந்து காணப்படுகின்றன.

- தொலைவில் சொற்பமாகக் கண்ணுக்குச் சிக்கும் பனங்காடுகளும் சில ஒற்றைப் பனைமரமும் ஆங்காங்கே முளைத்திருக்கும் கருவேலமரங்களும் பட்டுப்போன குட்டை மரங்களும் நித்தியக் கல்யாணி மலர்களைத் தாங்கிய செடிகளும் ஆவாரம்பூக்களை சுடரச் செய்யும் கொத்துச் செடிகளும் கடந்து போய்க்கொண்டே இருக்கின்றன.

- சிறிதும் பெரிதுமாக பாறைகள், திடீரென சிறு மலைத்தொடர்கள். செம்மண் காய்ந்த சரளைக்கற்கள் பரவிய வழித்தடங்கள். அனைத்திலும் மோதிச் சிதறும் வெயிலின் உக்கிரத்தைப் பார்க்கப் பார்க்க நமக்கும் வியர்த்துக் கசகசத்து விடுவதைப் போல இருக்கிறது.

- வயல் எலிகளைப் பிடித்து உணவுக்காக சுட்டுக்கொண்டிருக்கும் மூன்று தலைமுறையைச் சார்ந்த பெண்கள். அதில் சிறுமி கங்காவின் குழந்தைமை.

- டி.வி.எஸ் 50 வண்டி ஓட்டிச் செல்லும் இளம் மனைவியும் பின்னால் உட்கார்ந்திருக்கும் கணவனும்.

- நீர்வரத்தையே இழந்துவிட்ட நீரோடைக் கால்வாயும் அதில் கோக் பாட்டிலின் மூடிய வாய்ப்பகுதியைக் கடித்துக்கொண்டிருக்கும் நாய்க்குட்டியும்.

- கணபதியின் மகன் வேல் சுடுமணலில் கிடைக்கும் கூழாங்கல் ஒன்றை எடுத்து சட்டையில் அதன் வெயில் சூட்டைத் தேய்த்து தணியச் செய்து வாயில் அதக்கிக்கொள்ளும் காட்சி.

- கீழே கிடந்து எடுக்கும் சிறிய கண்ணாடித்துண்டை கையில் வைத்துக்கொண்டே அதில் பட்டுத்தெறிக்கும் வெயிலின் மஞ்சள்நிற வெளிச்சத்தை அனைத்தின் மீதும் அலையவிடுகிறான்.

- அதன் சுடுவெளிச்சத்தை முன்னே நடந்துபோகும் தகப்பனின் முதுகில் அடித்து முதுகுத்தோலை எரியச் செய்கிறான். கணபதி சட்டென நின்று திரும்பி முறைக்கும்போது பின்பக்கமாக மறைத்துக்கொள்கிறான். பின் மீண்டும் அப்பனின் நடை அதே விறுவிறுப்போடு தொடர்கிறது. சற்று தாமதித்து அப்பனின் கோபத்தைக் கண்டு மெலிதாகப் புன்னகைக்கிறான். அதில் சிறுபிள்ளையின் விளையாட்டுத்தனமும் குறும்பும் வெளிப்படுகிறது.

- நடக்க நடக்க, மலைப்பாறையின்மீது நீர்வரியோடிய பள்ளங்கள் ஓர் ஆதி மிருகத்தின் தடித்தத் தோல் போல் தோற்றம் அளிக்கிறது. அதன்மீது அலைந்து, நடந்து உடன் பயணித்து துணை வருகிறது அந்த ஒரு துண்டு முக்கோண வடிவ வெளிச்சமும்.

- ஊர் எல்லையில் வீட்டுக்கு சற்றுத் தொலைவில் சிறு மலைப்பாறையில் தன் குடும்பத்துப் பெயர்களை இதற்கு முன்பே வரிசையாகக் கீறி வைத்திருக்கிறான். இந்தப் பயணத்தின் இறுதியில் இப்போது கணபதியின்

பெயரைப் பொறித்துக்கொண்டிருக்கிற காட்சி.

- வீட்டு ஜன்னல் வழியே அடுப்பில் உலை பொங்கும் கரிப்புகை வெளியேறுவது.
- அடுப்புச் சட்டியில் நெருப்பின் தழல் சூழ அரிசியிலிட்ட உலை கொதிப்பது.
- கருநாகப் பாம்பு ஒன்று சரசரவென கணபதியின் பாதையைக் கடப்பது. கணபதியின் அச்சம் சூழும் முகம் மேலும் கறுத்துப் போய் திகைப்பது. நடை தளர்ந்து வேகம் குறைவது.
- அவனுக்கு முன்னே பாம்பைப் போலவே வளைந்தும் நெளிந்தும் நீண்டு கிடக்கும் மிச்ச பாதை.
- அகாலத்தில் தன்னை மாய்த்துக்கொண்ட பெண்ணின் ஆவி உச்சிவெயிலில் பொட்டல் காட்டில் அலைந்துகொண்டிருக்கும் என்று கேட்டு வளர்ந்திருக்கும் கணபதி சலங்கைச் சத்தம் கேட்டு உணர்ந்து பயப்படுகிறான்.
- கால்நகம் கல்லில் பட்டுப் பெயர்ந்து ரத்தம் சொட்டுகிற காட்சி.
- கணபதியிடம் வகைதொகையில்லாமல் அடிவாங்கி நிற்கிறான் வேல். அதுவொரு சிறுபாறையின் அடித்தூர். அதன் இடுக்கில் முளைத்து திருகிக்கொண்டிருக்கும் முரட்டு மரத்தின் வடிவைப் பார்க்கும்போது, பாறை மரத்தைப் பிடித்து வைத்திருக்கிறதா? மரம் பாறையைக் கெட்டியாகப் பிடித்தபடி நிற்கிறதா? அம்மரம் பட்டுப்போன கிளைகளை கைகளைப் போல விரித்து நிற்கும் நிலையில் ஒட்டுமொத்தமும் பாறையாக உருமாறியதைப் போல இருக்கிறது.
- மாட்டை மேய்ச்சலுக்கு அழைத்துப் போய் திரும்பிக்கொண்டிருக்கும் பெண்மணி ஒருத்தி அந்தப் பாறையின் மேட்டு விளிம்பில் காட்சி சட்டகத்திற்கு குறுக்கே கடந்துபோகிறாள். மாட்டின் கழுத்து மணி மெலிதாக ஒலித்தபடியே தேய்ந்து போகிறது.

வேல் முன்னதாகப் புறப்படும்போது தன்னுடைய புத்தகப்பையிலிருந்து தங்கைக்காக வாங்கிவைத்திருக்கும் பச்சை நிற நாய்பொம்மையை எடுத்துக்கொள்கிறான். அது ஓடிவரும் வழியில் முதன்முறையாகத் தகப்பனிடம் பிடிபட்டு வாங்கிய அடியோடு சேர்த்து நாய் பொம்மையும் தூக்கி வீசப்பட்டு விடுகிறது.

ஆனால் அவனுடைய வளர்ப்பு நாய்க்குட்டி கணபதியின் பின்னாலேயே தொடர்ந்து மெதுவாக ஓடிவந்து அடிவாங்கி நிற்கும் வேலிடம் தஞ்சமடைகிறது. பொம்மைக்கு பதில் மீண்டும் நாய்க்குட்டியோடு வீட்டுக்குள் போய் தங்கையை எழுப்பி அவளுக்கு விளையாட்டுக் காட்டுகிறான். பின்னர் வாய்க்குள்ளே அதக்கி வைத்திருக்கும் கூழாங்கல்லை வெளியில் எடுத்து எச்சில் ஈரத்தோடு அலமாரியில் வைக்கிறான். அங்கு ஏற்கனவே நிறைய கூழாங்கற்கள் சேர்ந்திருக்கின்றன.

வீட்டுக் குடத்திலிருக்கும் தண்ணீரை இரண்டு சொம்பு தீரக் குடித்து தாகம் தணிகிற கணபதிக்கு முன்னதாக தணிந்திருந்த கோபம் மீண்டும் மண்டைக்குள் ஏறிட தன் அம்மாவைப் பார்த்து அவள் எங்கே? என்று கேட்கிறான். அவள் ஊற்றில் நீர் எடுக்கப் போயிருக்கிறாள் என்று அம்மா பதில் சொல்லுகிறாள். அவளைக் கூட்டிவரச் சொல்லி அம்மாவை ஏவி விடுகிறான். அவள் போய்விடுகிறாள்.

அடுத்து பசிக்கு சோற்றை அள்ளித் தட்டில் போட்டுக்கொண்டு கவளம் கவளமாக முழுங்கியபடி திண்ணையில் உட்கார்ந்து வெற்றிடத்தை

வெறித்துக்கொண்டே மெல்லுகிறான். மனைவி வருவதற்கான காத்திருப்பாகவும் அது இருக்கலாம். அவனது மண்டைக்குள் நூறு விஷயங்கள் தொள்ளாயிரம் வடிவில் ஓடிக்கொண்டிருக்கலாம். அதற்கான யூகமும் நம் கையில்தான் விடப்படுகிறது.

ஊற்றுநீர் மணல் குவியலுக்குள் ஆழத்தில் கிடக்கிறது. வயது முதிர்ந்த பெண்ணின் கையொன்று, கலங்கிய நீரை ஒரு பிளாஸ்டிக் கப்பில் கொஞ்சம் கொஞ்சமாக முகந்து குடத்தில் ஊற்றுகிறது. சற்றுத்தள்ளி கரைபோல மேடிட்டிருக்கும் மணற்பரப்பில் நடுவயதும் இளவயதுமாகக் கலந்து ஒன்பது பெண்கள் குடங்களோடு தம் முறைகளுக்காகக் காத்திருக்கிறார்கள். அவர்கள் தத்தம் குடங்களை நிரப்பிக்கொண்டு வீடு திரும்புவதற்கு உச்சிவெயில் அந்தியை அடைந்து வெப்பமும் அடங்கிவிடும் போல.

அவர்களில் யாராக வேண்டுமானாலும் கணபதியின் மனைவி சாந்தியாக இருக்கலாம். அது நமக்குத் தெரியப்போவதில்லை. திரைக்கதை அவளைக் காட்டவில்லை. சிறுவன் வேலுக்கு எப்படி அவளொரு கானல் நீரில் கலங்கிய பிம்பமாக மனதில் படிந்திருக்கிறாளோ அப்படியேதான் நமக்கும் வாய்த்துவிடுகிறது.

பூமியின் ஆதார உயிர்சத்து தண்ணீர்தான். அது இல்லாத இடத்தில் மனிதர்களுக்கும் வாழ்க்கை கிடையாது. எவரும் யாருக்காகவும் காத்துக் கிடக்க வேண்டிய அர்த்தமும் கிடையாது.

கூழாங்கற்கள் மழைப் பொழிந்து காட்டுவெள்ளத்தில் இழுபட்டு உருண்டு உடைந்து சிதறி தேய்ந்து காலப்பயணம் செய்திருக்கும் பெரும்பாறைகளின் சிறிய வடிவம். அவை எழுதிட முடியாத இயற்கை வரலாற்றின் தொடர்ச்சியல் கிடைத்திருக்கும் கைக்கு அடக்கமான எளிய மிச்சங்கள். கூழாங்கற்களாக மாறிட முடியாமல் போன பெரிய பாறைகளும் பெரிய வடிவிலான கூழாங்கற்கள்தான் என்பது போலவும், இந்தப் பயணத்தின் காட்சிப் படிமத்தில் பலவிதமான லாங் ஷாட்களில் ஆங்காங்கே காணக் கிடைக்கின்றன. அதன் நெடுங்காலத்திய இயற்கைப் பயணம் நீர்வரத்து மறந்து, மறுத்துப்போன கொடுவெயிலில் தாகத்தைத் தணிக்கும் வித்தையைக் கூழாங்கற்கள் மனித வாயினுள் நிகழ்த்தும் மாயம் என்ன? அதில் ஒன்று இந்த வறட்சி காலத்தில் சிறுவன் வேலின் வாய்க்குள் அதக்கப்பட்டு ஒரு பயணத்தைத் தொடர்கிறது.

அவனுடைய வாழ்வில் இந்தப் புதிய கூழாங்கல் அன்றைய வெயில் தினம் பெற்றுத்தந்த அனுபவக் கணக்கில் புதுவரவு. அவைகளில் எதுவும் ஒன்றைப் போல் மற்றொன்றாக இல்லைதான்.

★

**1996**-ல் வெளியான பெர்ஸிய மொழித்திரைப்படம் The Father. பிரபல ஈரானிய இயக்குனர் மஜீத் மஜீதியின் இயக்கத்தில் வெளியான அவருடைய இரண்டாவது திரைப்படம் அது. அதற்குப் பின்னர் வெளிவந்து உலகெங்கும் புகழ்பெற்ற திரைப்படம் Children of Heaven.

The Father திரைப்படத்தில் பதினாலு வயது சிறுவன் தன்னுடைய தகப்பன் இறந்த பிறகு தன்னுடைய தாய் புதிதாகத் திருமணம் செய்துகொண்ட மாற்றுத் தகப்பனை விரோதியாக பாவிப்பான். அவனுக்கு ஒரு தங்கை இருக்கிறாள். புதிய ஆணை தன் குடும்பத்தின் தலைவனாக, தகப்பனாக ஏற்றுக்கொள்ள அவனால் முடியவில்லை. அந்த ஆள் ஒரு போலீஸ்காரன். இவர்கள் இருவருக்குமான பிணக்கு நீடிக்கும் நிலையில், வேறொரு அசந்தர்ப்பத்தில் ஒரு பாலைவனத்தில் இருவருமே தனித்து



மாட்டிக்கொள்கிறார்கள். அதுவொரு நீண்ட கொடும் பயணமாக மாறுகிறது. தாகத்திற்கு ஒரு சொட்டு தண்ணீர் கிட்டாத அப்பாலைவனம் அவர்களை மீட்டதா? கைவிட்டதா என்பது மிச்ச திரைக்கதை.

அந்தப் படத்துக்கு பிறகு இணையான ஓர் அனுபவத்தை உலகத் திரைப்பட ரசிகர்களுக்கு கூழாங்கல் வழங்கியிருக்கும் என்று உறுதியாகச் சொல்ல முடியும்.

★★★★

எழுத்தாளர் ஜி.நாகராஜனின் *'நாளை மற்றுமொரு நாளே'* என்கின்ற நாவலின் தலைப்பும் அவர் தன்னுடைய அவதானிப்பாகவும் பொதுவாகவும் சொல்லியிருக்கிற *'மனிதன், மகத்தான சல்லிப்பயல்'* என்பதும்.. கூழாங்கல் திரைப்படம் ஏற்படுத்திய அனுபவத் தாக்கத்தில் வாசிப்பு மனம் மீட்டுக்கொள்ளும் விஷயங்களிலொன்றாக உள்ளது.

கணபதி வேடம் ஏற்று கதாபாத்திரமாகவே உருமாறி தன்னுடைய அசலான நடிப்புத் திறனை வெளிப்படுத்தியிருக்கும் கருத்தடையான், நவீனத் தமிழ் இலக்கியச் சூழலில் அறியப்பட்ட ஓர் எழுத்தாளர்.

*'ஆகாச மாடன்'*, *'ஆதாளி'* இரண்டுமே அவருடைய சிறுகதைத் தொகுப்புகள். *'ஊட்டு'*, *'பொழிச்சல்'* என இரண்டுமே கவிதைத் தொகுப்புகள். *'கோட்டி'* என்கிற நாவலை 2020-ல் மணல்வீடு பதிப்பகம் வெளியிட்டது. இலக்கியச் சூழலில் பரவலாக வாசிக்கப்பட்ட அந்நாவல் கருத்தடையானின் முக்கியமான அடையாளமாகக் கருதப்படுகிறது.

கோட்டி நாவலின் அட்டைப்படத்தில் மொட்டைப்பாறையில் உச்சி வெயிலில் வெற்றுடம்பும் இடுப்பு வேட்டியுமாக நின்றபடி எழுத்தாளர் கருத்தடையான், கருப்பு வெள்ளைப் புகைப்படப் பிம்பமாக உறைந்திருக்கிறார். அந்த உருவம்தான் இந்தக் கூழாங்கல் திரைக்கதைக்குள் இறங்கி வந்து கணபதியாக உருமாறி நடையாய் நடந்து திரிந்திருக்கிறது போலும்.

ஒரு தேர்ந்த நடிகனாகக் கருத்தடையானை வடிவமைத்து 2021-ல் தன் கடைவாய்க்குள் அதக்கியபடி இந்தக் கூழாங்கல் உலகெங்கும் சுமந்து திரிந்து 2023-ல் சொந்த பூமிக்குத் திருப்பிக் கொண்டுவந்து சேர்த்திருக்கிறது.

elangomib@gmail.com ■



சிறுகதை

செய்யாறு தி.தா.நாராயணன்

# நாடகம் போட்டோம்

எங்கள் மாவட்டத்தில் உள்ள எல்லா அரசு ஆரம்ப சுகாதார நிலையங்களிலும் மற்றும் எல்லா மருத்துவமனைகளிலும் குடும்பக் கட்டுப்பாடு அறுவைச் சிகிச்சை முகாம்கள் மும்முரமாக நடந்துக்கொண்டிருந்த காலம் அது. ஒவ்வொரு அரசு ஊழியரும் இரண்டு ஆண் அறுவை சிகிச்சை (வாசெக்டமி) கேஸை கேன்வாஸ் பண்ணி கூட்டிவரவேண்டும் என்று அரசு இலக்கு நிர்ணயித்து உத்திரவிட, எல்லாரும் ஆலாய் பறந்து பறந்து கொத்துக் கொத்தாய் தகுதியுள்ள மனிதர்களைக் கூட்டி வந்து வாசெக்டமி ஆபரேஷன் பண்ணி, உதவி தொகையும், ரெண்டு கிலோ அரிசியும் கொடுத்து அனுப்பிக்கொண்டிருந்த காலம்.. எல்லா மருத்துவ மனைகளும் பிஸி. ஆசிரியர்கள், வருவாய் துறை அதிகாரிகள், விவசாயம், காட்டிலாகா என்று எல்லா துறைகளிலும் கேஸ் கிடைக்காத பலரும் யாராவது அழைத்துவரும் கேஸ்களுக்கு மேல் நூறு இருநூறு என்று தன் கைக்காசை கொடுத்து தன் பேருக்குப் போட்டுக் கொள்வதும் நடக்கும். இதில் பல பல கோளாறுகள் நடப்பதும் உண்டு. அவ்வப்போது அவர்களுக்குள் சண்டைகள் நடக்கும்.

கஜகஜவென்று கூட்டம். பி.டி.ஓ வின் ஜீப் எந்நேரமும் குடும்பக் கட்டுப்பாடு ஆப்ரேஷனுக்கு தகுதியுள்ள ஆட்களை கொண்டுவந்து இறக்குவதும் திருப்பி கொண்டுபோய் விடுவதுமாக பிஸியாக அங்கேயே வட்டமடித்துக் கொண்டிருக்கும். மாவட்டத்தில் ஒருபக்கம் ஆங்காங்கே குடும்பக் கட்டுப்பாடு பிரச்சார நாடகங்கள் நடந்துக் கொண்டிருந்தன. அந்த காலகட்டத்தில்தான் நாங்களும் எங்கள் ஆரம்ப சுகாதார நிலையத்தின் சார்பாக நாங்களே நடிக்கும் குடும்பக் கட்டுப்பாடு நாடகம் ஒன்று போடலாம் என்று பேசி தீர்மானித்தோம்.. முதலில் டாக்டர்களைச் சம்மதிக்க வைத்து, அவர் மூலமே மாவட்ட சுகாதார அதிகாரியிடம் வாய்மொழி அனுமதியையும் வாங்கி விட்டோம். டியூட்டிக்கு பாதிப்பு இல்லாமல் மாலை ஐந்து மணிக்கு மேல்தான் நாடக வேலைகளை கவனிக்க வேண்டும் என்ற கண்டீஷனோடு அதிகாரி அனுமதி கொடுத்தார்.

கதைக்கு வருவோம். நாடகத்தின் தலைப்பு ‘பெற்றவன்’. இந்த நாடகத்தை நடத்தலாம் என்று முடிவு செய்த அந்த நிமிடத்திலிருந்தே பிரச்சினைகள் தலைதூக்க

ஆரம்பித்து விட்டன. எங்கள் ஆரம்ப சுகாதார நிலையம் என்பது மாடல் இந்தியா போல. ஒற்றுமையில் வேற்றுமை. முப்பது பேருக்குள் முப்பது பிரிவினைகள். ஒவ்வொருவரும் தனக்குத்தான் கதாநாயகன் வேஷம் என்ற கனவில், ஆளாளுக்கு கட்சி கட்ட ஆரம்பித்து விட்டார்கள். ஒரு சிரிப்பான விஷயம் இந்த விஷயத்தில் ஜூனியர்களை விட சீனியர்கள்தான் கதாநாயகன் வேஷத்திற்கு அதிகம் முனைப்பு காட்டினார்கள். சினிமாவிலேயே கதாநாயகர்களில் வயசானவர்களுக்குத்தான் மவுசு ஜாஸ்தி என்பது அவர்கள் வாதம். சீனியர்களுள் ஒருத்தருக்கு ஓமகுச்சி நரசிம்மன் பாடிகட்டு, இன்னொருத்தர் குண்டு கல்யாணம், அவர்களுக்கும் கதாநாயகன் வேஷந்தான் வேணுமாம். வாக்குவாதம் முற்றிப் போக, பாதி நபர்கள் முறுக்கிக் கொண்டார்கள். இறுதியாக டாக்டர் தலையிட்டு எல்லோரையும் கூப்பிட்டு திட்டினார். அதன்பின் யார் யாருக்கு என்ன என்ன வேஷங்கள் என்பதை அவரே தீர்மானித்து நியமித்து முடித்தார். எவனாவது வாயைத்திறப்பானா?. தலைமையின் முடிவுக்கு அப்பீல் ஏது?.

உயரமாகவும் சிகப்பாகவும் இருந்த குடும்ப நல சுகாதார ஆய்வாளர் அய்யம்பெருமாள்தான் கதாநாயகன் என்று முடிவு செய்து அறிவித்தார். இதில் யாருக்கும் சம்மதமில்லை. அவன் அவ்வளவு சூட்டிகையான ஆள் இல்லை. அதிகம் பேசமாட்டான். சித்தம் போக்கு சிவன் போக்கு மாதிரியான ஆள் அவன். எதிலும் ஈடுபாட்டோடு இருக்கமாட்டான். ஒத்திகைக்கே ஒழுங்கா வருவானான்னு தெரியாது. வேஷம் ஊத்திக்கும் என்பது அனைவரின் அபிப்பிராயம். டாக்டர்களுக்கும் அரை மனசுதான். டியுட்டியை ஒழுங்காகச் செய்யாத சோம்பேறி. எல்லா ரெக்கார்ட்களிலும் பெண்டிங் வெச்சிருப்பான். டீக்காக டிரஸ் பண்ணிக்கிட்டு வர்றதோட சரி. இதில் இன்னொரு சுகாதார ஆய்வாளர் ஏழுமலைதான் பொறுக்க மாட்டாமல் தன் சக அலுவலர் சத்தியனுடன் போய் டாக்டர்களைப் பார்த்தான்.

“சார் அய்யம்பெருமாள் சின்ன வயசில இருந்தே ஷார்ப் கிடையாது சார். நாங்க ரெண்டு பேரும் ஒன்னாங் கிளாஸ்ல இருந்தே ஒண்ணா படிச்சவங்க சார். அவனைப் பத்தி எங்களுக்கு நல்லா தெரியும். கதாநாயகன் வேஷத்தை எல்லாம் அவன் தாங்க மாட்டான் சார்.”

“அய்யம்பெருமாள் ஹீரோ வேஷத்துக்கான வசனத்தை மனப்பாடம் பண்ண மாட்டான். பேரு கெட்டுடும். வேறு ஏதாவது வேலைக்கு அவனை பயன்படுத்திக்கலாம் சார்.” அதற்கப்புறம் டாக்டர்கள் இருவரும் கலந்து பேசி உயரமாகவும் கட்டுமஸ்தாகவும் இருந்த கம்பவுண்டர்தான் கதாநாயகன் என்று முடிவு செய்தார்கள்.. எல்லாரும் வாயை மூடிக்கொண்டார்கள். கதைப்படி கதையில் நாலு இளைஞர்கள் வருகிறார்கள். இளைஞர்களாக இருந்த மூன்று குடும்பக் கட்டுப்பாடு சுகாதார ஆய்வாளர்கள், ப்ளஸ் ஒரு நர்சிங் ஆர்டர்லி, ஆக நால்வரும் அந்த வேஷங்களுக்குப் பொருந்தினார்கள். குக் கம் வாட்டர்மேன் தண்டபாணிதான் கதாநாயகி. அவன் திட்டமான உயரத்தில், சற்று பூசின உடல்வாகு. கொஞ்சம் சிகப்பாகவும் இருப்பான். மலேரியா சுகாதார ஆய்வாளர் வேணுப்பிள்ளைக்கு வயசான அப்பா கேரக்டர். லோகநாதன் சுகாதார ஆய்வாளருக்குக் குடும்பக் கட்டுப்பாடு பிரசாரகர் வேஷம், ஆபீஸ் ஹெட்கிளார்க் கஜா சார் ஒரு காலத்தில் அமெச்சூர் நாடகங்கள் நடத்தி கையை சுட்டுக் கொண்ட அனுபவஸ்தர். அவர்தான் டைரக்டர் என்று முடிவானது. எனக்கு எந்த வேஷமும் இல்லை. நான் உதவி டைரக்டர் சுருக்கமாக சொன்னால் எல்லாவற்றையும் பார்த்துக்கொள்ள

வேண்டிய எடுபிடி. இதில்லாமல் ஆஸ்பிட்டல் நர்ஸுகள் இரண்டு பேர் நர்ஸுகளாகவே வருகிறார்கள். பக்கத்து ஊரிலிருந்து தெருக்கூத்தில் ஆர்மோனியம் வாசிப்பவரையும், தபேலா அடிப்பவரையும், முகவீணை வாசிப்பவரையும், மியூசிக்கிற்கு ஏற்பாடு செய்து விட்டோம். பி.இ.இ கோபால் சாருக்கு ஜட்ஜ் வேஷம். நாடகத்தின் ஆரம்பத்தில ஒரு சீன், கடைசிக்கு முன்பாக ஒரு சீன், ஆக ரெண்டே ரெண்டு சீன் தான் வருகிறது அவருக்கு. டயலாக்கும் நாலே நாலு வார்த்தைகள் அவ்வளவுதான்.

“என்னாய்யா அநியாயம், இந்த ரெண்டு சீனுக்காய்யா ஒருத்தன் அரிதாரம் பூசிக்கிட்டு கடைசி வரைக்கும் காத்துக் கிடப்பான்?. த்தூ! இது ஒரு பொழப்பா எனுக்கு. என் போஸ்ட்டுக்கான மரியாதை கூட இங்க இல்லைய்யா.” பி.இ.இ சார் புலம்பிக்கிட்டு திரியறாரு. அவருடைய மேற்பார்வையின் கீழ் நாலு குடும்பக் கட்டுப்பாடு சுகாதார ஆய்வாளர்கள் வேலை செய்றாங்க. ஆனால் ஒன்னும் பண்ண முடியாது நியமிச்சவர் டாக்டர் எனும் பெரிய பாஸ்.

அன்றிலிருந்து காலியாக இருந்த ஸ்டாஃப்ப்ஸ் குவார்ட்டர்ஸ் ஒன்றில் இரவில் தினசரி ஒத்திகை நடக்க ஆரம்பித்தது. கற்பூரம் ஏற்றி, தேங்காய் உடைத்து பயபக்தியுடன் சாமி கும்பிட்டு விட்டு ஒத்திகையை ஆரம்பித்தோம். நடிப்பதில் எல்லோருக்கும் சுவாரஸ்யம் ஏற்பட்டுவிட, ஒத்திகை ரெகுலராக நடக்க ஆரம்பித்தது. ஆரம்பித்த நாளிலிருந்தே எல்லோரும் ஒரு லெவலில் ஸ்டெயில் பண்ணிக்கிட்டு திரிந்துக் கொண்டிருந்தார்கள். எல்லோருடைய நடை உடை பாவனைகளும் அநியாயத்திற்கு மாறிப் போய்விட்டன. உடம்பை பம்முற மாதிரி வெச்சிக்கிட்டு உடம்பை லேசாக குலுக்கி, தலையை ஆட்டி ஆட்டி நடக்கும் சிவாஜி மாதிரி சில பேர் தங்கள் நடையை மட்டுமில்லை தொனியையும் கூட மாத்திக்கிட்டாங்க. விலுக் விலுக் என்று வேக வேகமான ரஜினி நடையை பலபேர் நடந்தார்கள். பி.இ.இ கோபால்சார் வயசானவர், அடுத்த வருஷம் ரிடையர்மெண்ட். அந்தாளு கூட ரஜினி நடை நடக்க ஆரம்பிச்சிட்டார். ஜட்ஜின் ரெண்டு சீனுக்கு எதுக்கு இந்த நடை?. இடுப்பை முன்பக்கமாய் சற்று பெண்டு ஆக்கிக் கொண்டு, கைகளை தளர விட்டு, உதறி உதறி நடக்கும் ரவிச்சந்திரன் நடையை சிலபேர் எடுத்துக்கிட்டானுங்க. சொல்லி வெச்ச மாதிரி எல்லாருடைய தலைமுடி ஸ்டைல்களும் மாறிப் போயிருந்தன. தலைமயிர் முன் நெற்றியில் வந்து கவர்ச்சிகரமாகப் புரள ஆரம்பித்தது. இதைக்கூட ஓகேன்னு ஒத்துக்கலாம். அப்பா வேஷம் போடுகிற வேணுப்பிள்ளைக்கு எதுக்கு முன்நெத்தி மயிரு?.

“ஏன்யா ரஜினி மாதிரி நடந்தா மட்டும் போதுமா?. முன் நெத்தி மசுருக்கு பி.இ.இ இன்னாய்யா பண்ணுவாரு?.”

இளவட்ட சுகாதார ஆய்வாளர்கள் குரூப் தங்களுக்குள் பேசி சிரித்துக் கொண்டனர். பி.இ.இக்கு முன்பக்கம் முக்கால் மண்டைவரை முழுசாய் வழுக்கை. அடுத்து சாதாரணமாக ஒருத்தருகொருத்தர் பேசிக் கொள்ளும் போதுகூட சிவாஜி மாதிரி நீட்டி இ... ல்..லை.யே.ப்.பா. போவணும்னு தோன்றது ஆனா எங்க போறதுன்னு தோணலியே,... என்ன பண்ணுவேன்?. என்கிற மாதிரி இமிடேட் பண்றதும், ரஜினி மாதிரி படபடப்பாகவும், அதே சமயம் அப்பப்ப சம்பந்தமில்லாமல் பன்ச் டயலாக் வேற வந்து விழும். அப்புறம் ரவிச்சந்திரன் மாதிரி சற்று கரகரப்பாகவும் பேச அரம்பித்தார்கள். கம்பவுண்டர் கதாநாயகன் மூனு பேர் ஸ்டைலையும் பிராக்டீஸ் பண்ணிட்டான் போல. டிஸ்பென்சரியில் பேஷண்ட்களுக்கு

மாத்திரை கொடுக்கும்போது கூட சிவாஜி மாதிரி, ரஜினி மாதிரி பேசி மாத்திரையை எப்படி சாப்பிடணும்னு சொல்லிக் கொடுத்தார். மக்கள் ஒருமாதிரி பார்த்துவிட்டு சிரித்துக் கொண்டு போனார்கள்.

வழக்கமாக இரவு எட்டு மணிக்கு எல்லாரும் சாப்பிட்டு விட்டு வந்து ஆஜராயிடுவோம். ஒத்திகை ஆரம்பிச்சுடும். முதலில் எல்லோரும் கோரஸாக விநாயகர் துதி பாடல் ஒன்றை பாடவேண்டும். வார்ம் அப் மாதிரிதான். ஒத்திகை நடக்கும்போது மற்ற குவார்ட்டர்ஸ்களில் வசிக்கும் குடும்பத்தினர்கள் பெண்களும் குழந்தைகளுமாய் கூட்டமாய் தினசரி வேடிக்கை பார்க்க வந்து உட்கார ஆரம்பித்தார்கள். டைரக்டரும் நடிக்கிறவர்களின் மேடைக் கூச்சங்கள் குறையட்டுமே என்று அனுமதித்தார். ஒத்திகை முடிய இரவு பனிரெண்டு மணியாயிடும். ஒத்திகையில் டைரக்டரின் உழைப்புதான் அதிகம். சிகரெட்டை ஊதிக்கிட்டே கடுமையாய் வேலை வாங்குவார். அவ்வப்போது டயலாக்குகளை மாற்றியமைப்பார். நடித்துக் காட்டுவார். அவருக்கு ஒரு பிரச்சினை வந்துவிட்டது. வேடிக்கை பார்க்க வருபவர்களில் டைரக்டரின் அம்மாவும் அடிக்கடி வர ஆரம்பிச்சிட்டாங்க. அம்மா எதிரில் எப்படி சிகரெட் ஊதறது?. சிகரெட் பிடிச்சாதான் அவருக்கு மூளை வேலை செய்யும். அதற்கு வேணுப்பிள்ளைதான் ஒரு ஏற்பாட்டை செஞ்சார். அவருக்கு கதாநாயகனின் அப்பா வேஷம் கொடுக்கப் பட்டிருக்கு.. மறுநாள் டைரக்டரின் அம்மா தூரத்தில் வரும்போதே வேணுப்பிள்ளை பார்த்துவிட்டு உள் பக்கம் திரும்பி உரக்க “கண்டுக்கோ... கண்டுக்கோ...” என்று குரல் கொடுக்க, அதுதான் சிக்னல். அவ்வளவுதான் டைரக்டர் உஷாராகி சிகரெட்டை அணைச்சிடுவார். அன்றிலிருந்து கண்டுக்கோ... கண்டுக்கோ... சிக்னல் எங்கள் க்ரூப்பில் பாப்புலர் ஆயிடுச்சி. எங்களில் யார் வேண்டுமானாலும் குரல் கொடுக்க ஆரம்பித்தோம், இன்னும் ஒரு படி மேலே போயி பகல் நேரங்களில் அவர் வெளியில் எங்காவது சிகரெட் புகைத்துக் கொண்டிருப்பதை பார்த்து விட்டால் கூட போதும் எங்காளுங்க சும்மா இருக்கமாட்டான். “கண்டுக்கோ... கண்டுக்கோ...” என்று குரல் கொடுப்பான். அவ்வளவுதான் டைரக்டர் அனிச்சைச் செயலாய் சிகரெட்டை தூர வீசிவிட்டு வடிவேலுவின் அடடா வட போச்சே மாதிரி முழிச்சிக்கிட்டு நிற்பார். ஒத்திகையின் போது சில சமயங்களில் டைரக்டர் தலையிலடித்துக் கொள்ளும்படி எல்லாரும் சேர்ந்து கோரஸாக கண்டுக்கோ கண்டுக்கோ.. என்று கத்துவோம்.

விளைவு பின்னால ஒரு கட்டத்தில் கண்டுக்கோ...கண்டுக்கோ...க்கு என்ன அர்த்தம்னு டைரக்டருடைய அம்மாவுக்கே தெரிந்து போனது வேற விஷயம்.

ஆயிற்று. பதினைந்து நாள் ஒத்திகையை முடிச்சாச்சி. எல்லாருக்கும் நடிப்பும், வசனமும் கைவசமாகி விட்டன. பாவங்களும் உணர்ச்சிகளின் வெளிப்பாடுகளும் தொழில் முறை நடிகர் ரேஞ்சுக்கு இல்லை என்றாலும் ரொம்ப மோசமாக இல்லை. அடுத்து நாடகம் நடக்கும் தேதியை ஃபிக்ஸ் செய்தார்கள். ஒத்திகையின் கடைசி நாளன்று ஆஸ்பிட்டலின் இரண்டு டாக்டர்களும் பார்வையாளர்களாக வந்து உட்கார்ந்து விட்டார்கள். ஃபைனல் என்பதால் ஏற்பாடு செஞ்சிருந்த மியூஸிக் குரூப்பையும் கூப்பிட்டு இசைக்க வைத்தோம். ஒவ்வொருத்தருடைய பெர்ஃபார்மன்ஸும் நன்றாக இருந்தது. ஒத்திகையே அமர்க்களமாக இருந்தது. எல்லோரும் சின்சியராக நடித்து டாக்டர்களிடமும், வந்திருந்த மற்றைய ஜனங்களிடமும் பாராட்டுதல்களைப் பெற்றோம். மகிழ்ச்சியாக இருந்தது.

“ ‘பெற்றவன்’ குடும்பநல நாடகம் நடக்கும் நாள் வந்து விட்டது. மூன்று மணி நேர ப்ளே அது. ஆஸ்பிட்டலிலும், வெளியிடங்களிலும் பதினைந்து நாட்களுக்கு முன்னதாகவே பேனர்கள் வைக்கப்பட்டிருந்தன. ஆரம்பச் சுகாதார நிலைய ஊழியர்களே பங்கேற்று நடிக்கும் குடும்பநல நாடகம் என்பதால் மாவட்ட சுகாதார அதிகாரியும், மாவட்ட குடும்ப நல அதிகாரியும் பார்க்க வருவதாகத் தகவல் அனுப்பியிருந்தார்கள்.. அப்பவே டாக்டர்களுக்கு வயிற்றில் புளி கரைத்தது. கையைப் பிசைந்தார்கள். வர்ற அதிகாரிகள் சும்மா வரமாட்டார்கள். கூடவே சிஷ்ய கோடிகள்னு ஒரு பெரிய குரூப் வரும். அவங்க ஐடியாவே வேற. “கம்புக்கு களை வெட்டுன மாதிரியும் ஆச்சு, தம்பிக்கு பொண்ணு பார்த்த மாதிரியும் ஆச்சு” என்ற கதைதான். நாடகம் பார்த்த மாதிரியும் ஆச்சி,, ஆரம்ப சுகாதார நிலையத்தை இன்ஸ்பெக்ஷன் பண்ண மாதிரியும் ஆச்சின்ற மாதிரி நாலு ரெக்கார்டுகளில் கையெழுத்து போட்டு இன்ஸ்பெக்ஷனையும் முடிச்சிட்டு பயணப் படியையும் வாங்கிடுவாங்க. வர்றவங்களுக்கு ராத்திரி சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணணும். அதுவும் அசைவ சாப்பாடு என்பது மஸ்ட்.. இது எழுதப்படாத சட்டம். எப்படியும் இருபது சாப்பாட்டுக்கு மேல ஆயிப்போவும். அதுக்கு தோதாக வயணமாக வறுத்த கறி, மீன், எறா, முட்டை ஆம்லெட் போன்ற சைட் டிஷ்கள் வேற இருக்குது. காஞ்சிபுரம் மஸ்தான் ஓட்டலில் இருந்து ஆளனுப்பி வாங்கிவர முடிவு பண்ணார்கள்.

ஆஸ்பிட்டலையொட்டி வெளியில் மேடை போட்டு நாடகத்திற்கு ரெடி பண்ணிக் கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வேலையையும் பார்த்து பார்த்து செய்தோம். மேடைக்கு ஹைஸ்கூலில் இருந்து பென்ஞ்சுகளை எடுத்துக்கிட்டோம். ஒப்பனைக்கு பக்கத்து டவுனிலிருந்து கட்டைக் கூத்துக்கு மேக் அப் போடுகிற மேக் அப் மேன் ஒருத்தனை ஏற்பாடு பண்ணியிருந்தோம். அந்த ஆளும் வந்தாச்சி. மேடையலங்காரம், லைட் அரேஞ்மெண்ட் எல்லாம் நடந்துக் கொண்டிருந்தது. முதல் அனுபவம் என்பதால் நடிகர்கள் எல்லோரும் நெர்வஸாகத் தெரிந்தார்கள். ‘அவர்கள் கடைசி நேர ஒத்திகையில் இருந்தார்கள். டைரக்டர் அவர்களின் நடிப்பில் சின்னச் சின்ன திருத்தங்களை சொல்லி நாடகத்துக்கு செம்மை ஏற்றிக் கொண்டிருந்தார். வர்ற அதிகாரிகளைத் தவிர மியூசிக், ஒப்பனை, ஒலி, ஒளி, அரேஞ்மெண்ட் எலெக்ட்ரீஷியன்கள், எடுபிடிகள் போன்ற இதர ஆட்களுக்கு உள்ளூர் ஓட்டலில் சைவ சாப்பாட்டுக்கு ஏற்பாடு பண்ணியாச்சு. மாவட்ட அதிகாரிகள் ரெண்டு பேரும் ப்ளஸ் சிஷ்ய கோடிகள் என்று பத்து பேர்களும் மாலை நாலு மணிக்கே வந்து இறங்கி விட்டனர். அதிகாரிகளுக்கு தேவையான காபி, டீ, சிகரெட், பாக்கு இத்தியாதி இத்தியாதிகளுக்கு அவங்க கூடவே இருந்து கவனிக்கச் சொல்லி குடும்பநல ஆய்வாளர் ஒருத்தரிடம் டாக்டர் பணம் கொடுத்து ஏற்பாடு பண்ணிட்டார்.

இரவு ஒன்பது மணிதான் நாடகம் ஆரம்பிப்பதற்கான ஷெட்யூல் டைம். எல்லாம் ரெடி. எங்கள் ஆஸ்பிட்டலை சுற்றி நெருக்கமாக மூணு கிராமங்கள் இருக்கின்றன. அங்கெல்லாம் சூப்பராக பப்ளிசிட்டி பண்ணியிருந்தோம், ஏற்கனவே எல்லா இடங்களிலும் நாடகம் பற்றிய தகவல் பரவி இருந்தது. அதனால் இரவு எட்டு மணிக்கெல்லாம் எக்கச்சக்கமான கூட்டம் சேர்ந்து விட்டது. மேடைக்கு எதிரில் மைதானம் முழுக்கப் பரவலாக மக்கள் வெள்ளம். ஒரே இரைச்சல். எட்டு மணிக்கெல்லாம் சைவ, அசைவ சாப்பாட்டு செக்ஷன் வேலைகளும் முடிந்தாயிற்று. உபரியாக பி.டி.ஓ.வும் தன் ஜால்ராக்களுடன் வந்து விட்டார், அதில்லாமல் நாடகத்தில் நடிக்கும்

நடிகர்களுக்கும் அசைவ சாப்பாட்டை டாக்டர்கள் ஏற்பாடு செய்துவிட்டனர். அசைவம் நாற்பது சாப்பாடுகளுக்கு மேல ஆயிப்போச்சி. கடைசியில் டாக்டர்களுக்கு சாப்பிட ஒன்றும் கிடைக்கல்லை. கடைசியில் அவர்கள் சாப்பிட்டது சைவ சாப்பாடுதான். டைரக்டர் பரபரப்பாக ஓடிக் கொண்டிருந்தார். இப்போது டாக்டர்கள் இருவரும் அதிகாரிகளின் பின்னே வால் பிடித்துக் கொண்டிருந்தார்கள். அதற்குள் அதிகாரிகள் இருவரும் சப் ஸ்டாக், மெயின் ஸ்டாக் ரெஜிஸ்டர்ஸ், கேஷ் புக், யுடிபிஆர் போன்ற தஸ்தாவேஜ்களைத் தருவித்து கையொப்பமிட்டு முடித்து, வந்ததற்கு அலிபி தயாரித்து முடித்திருந்தார்கள். எட்டரை மணிக்கெல்லாம் ஒப்பனை வேலைகள் ஓவர். என்ன மழை வந்து கெடுக்காமல் இருக்க வேண்டும். மதியத்திலிருந்தே வானம் இருட்டிக் கொண்டு கொசுத் தூறல் போட்டுக் கொண்டு இருக்கிறது. கூட்டத்தில் ஒரே கூச்சலும் சீழ்க்கையொலியும் பறக்குது. எங்கும் பீடி, சிகரெட்டுகளின் புகை. ஊடே சாராய நாத்தம். சள சளவென்று பேச்சு. ஆயிற்று சரியாக ஒன்பது மணிக்கு ஆர்மோனியமும், தபலாவும் இசைக்க ஆரம்பிக்க, ஊடே முகவீணையும் இனிமையாக இசைத்தது. நிமிஷத்தில் கூட்டம் அமைதியடைந்து விட்டது. முதலில் எல்லா நடிகர்களும் சேர்ந்து கோரஸாக விநாயகர் துதி பாடலை உரக்க பத்து நிமிஷம் இசையுடன் பாடினார்கள். அடுத்து டைரக்டர் மேடைக்கு வந்து பதினைஞ்சி நிமிஷம் நாடக அறிமுகம் செய்தாரு. அவ்வளவுதான். கதை ஆரம்பம்.

முதல் சீனே கோர்ட் சீன்தான். ஃப்ளாஷ் பேக் கதை. பி.இ.இ கோபால் சார் தான் ஜட்ஜ். அவர் வேஷத்திற்கு ரெண்டே ரெண்டு வசனந்தான். எஸ் எஸ் புரஸீட், அப்ஜெக்ஷன் ஓவர் ரூல்டு. அவரும் எனக்கு ரெண்டே வசனம்தானப்பான்னு சொல்லி ஒருநாள் கூட ஒத்திகைக்கு வரவில்லை. கடைசி நாள் ஒத்திகையை டாக்டர்கள் பார்க்க வந்த அன்று கூட பி.இ.இ வரவில்லை. குற்றவாளி கூண்டுல கதாநாயகன் வறுமைக் கோலத்தில் பரட்டை போல தாடி மீசையுடன் நிற்கிறான். பிரதானமாய் உயரமான சீட்டில் ஜட்ஜாக கோபால் சார் அமர்ந்திருக்கிறார், கீழே சேரில் ரெண்டு மூன்று வக்கீல்கள். நீதி மன்றத்தின் யூனிஃபார்ம் போல எல்லோரும் கருப்பு கோட்டு அணிந்திருந்தனர். ஒரு ஓரத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் அப்புறம் கோர்ட் குமாஸ்தா என்று முதல் சீனே அமர்க்களமாகக் களைகட்டியது. வக்கீல் மேடையின் இந்த கோடிக்கும் அந்த கோடிக்கும் வேக வேகமாக நாலு ரவுண்டு ரஜினி நடை நடந்து முடிச்சப்புறம்தான் ஸ்டைலாகத் திரும்பி பேச ஆரம்பிச்சார். முதலில் ஒரு ஸ்லோகம் மாதிரி சம்பந்தமில்லாமல் "ஆண்டவன் சொல்றான், இந்த ஏழுமலை முடிக்கிறான் என்று பன்ச் டயலாக் வேற. வக்கீலாக நடிப்பவர் பேர் ஏழுமலை. கைத்தட்டல் பொறிந்தது. டைரக்டர் தலையிலடித்துக் கொண்டார். அடுத்த பத்து நிமிஷங்களுக்கு காரசாரமாக குற்றவாளி செய்த குற்றங்களை சிரத்தையுடன் பாயிண்ட் பாயிண்ட்டாய் சொல்லி முடித்து விட்டு, குற்றவாளியை குறுக்கு விசாரணை செய்ய அனுமதிக்க வேண்டும் யுவர் ஆனர் என்று சொல்லி முடித்தார். எங்கும் நிசப்தம். ஜட்ஜ் கிட்டயிருந்து பதில் வரவில்லை. அவருக்கு வசனம் மறந்து போயிடுச்சி போல. ஜட்ஜ் திருதிருவென்று முழித்துக்கொண்டு உட்கார்ந்து இருக்கிறார். வக்கீல் சிக்னல் கொடுத்துப் பார்க்கிறார். டைரக்டரும் திரைக்கு பின்னாலிருந்து உசுப்பி விட்டு பார்க்கிறார். ஊஹூம் நோ யூஸ். நேரம் போய்க் கொண்டேயிருக்கிறது. சரி திரையை இறக்கி ஏத்தி அடுத்த சீனுக்கு போயிடலாம் என்று முடிவெடுத்த போது, ஜட்ஜ் ஒருமாதிரி சுதாரித்து முன்னே நகர்ந்து மைக் கிட்ட வாயை வெச்சி,

“ஏழுமலை! இன்னா சொல்றதுப்பா.” ன்னு பாவி வக்கீலைப் பார்த்து கேட்டானே ஒரு கேள்வி. கூட்டம் குபீரெனச் சிரித்தது. வக்கீலுக்கு கோபம் வந்து விட்டது. அடப்பாவி கெடுத்தானய்யா. அதற்குள் கதாநாயகனுக்கு வேற என்னான்னு தெரியல பாதியிலேயே கூண்டிலிருந்து இறங்கி அவசர அவசரமாக பின் பக்கம் ஓடுகிறான்.

“யோவ்! எஸ் எஸ் புரஸீட்னு சொல்லுய்யா.”னு பதிலுக்கு வக்கீல் கத்த,

“எஸ்..எஸ்..ப்ரொஸீட்....” ரொம்பவும் ரசாபாசமாகிப் போச்சி. இது மேடை என்ற நெனைப்பு இல்லை. நாடகம் சிரிப்பாய் சிரிச்சிப் போச்சி..சே! முதல் சீனே இப்படியா சொதப்பலாகணும்?. டாக்டர்களின் முகங்களில் ஒருத்தருக்கு எள்ளும், இன்னொருத்தருக்கு கொள்ளும் வெடிக்கிறது. இன்னும் கூட்டத்தில் சிரிப்பலை அடங்கவில்லை. சின்ன வேஷம் கொடுத்ததால் பி.இ.இ கோபால் சார் வேண்டுமென்றேதான் அப்படி பண்ணார் என்று எங்களுக்குள் ஒரு கருத்து ஊடாடிக் கொண்டிருந்தது. அதற்கப்புறம் எதுவுமில்லை. நாடகம் ஒழுங்காக நடந்துக் கொண்டிருந்தது. மக்களும் அமைதியாக பார்த்துக் கொண்டிருந்தார்கள். இடையில் நாயகன் நாயகியுடன் சேர்ந்து பாடும் டூயட் பாட்டு வந்தது. “பெண்ணே ஒரு ஓவியம், அவள் கண்ணே ஒரு காவியம்” என்று பாடினார்கள். கம்பவுண்டர் கதாநாயன் மூன்று விதமான ஸ்டைல் நடைகளுக்கும் பயிற்சி எடுத்திருந்ததால் பாடல் காட்சியில் சிவாஜி, ரஜினி, ரவிச்சந்திரன் என்று மூன்று விதமான நடைகளையும் கலந்து கட்டி நடந்துக் காட்டி கைத்தட்டல் வாங்கினான். ஆர்மோனியம் இசைக்க, தபேலா பொரிந்தது. ஊடே முகவீணையின் பிட்டுகளும் பாந்தமாய் இருந்தது. மக்கள் வெள்ளம் படபடவென்று கைத்தட்டியது. மக்கள் நன்றாக ரசித்துக் கொண்டிருந்தார்கள்.

பாட்டு முடியும் முன்பாகவே மறுபடியும் கம்பவுண்டர் அவசரமாக பின் பக்கம் ஓட ஆரம்பித்தான். பார்த்துக் கொண்டிருந்த டாக்டர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. கொஞ்ச நெரம் கழித்து டாக்டர் வந்து டைரக்டரிடம் என்னவென்று கேட்க

“சார்! லூசு சார் அவன். நடிக்கிறவங்க எல்லாருக்கும் உங்க செலவில கறி சாப்பாடு போட்டீங்க இல்ல?. ஓசில கிடைக்குதுன்னு மட்டனை வாரி வாரி தின்னுட்டான். அதான் பேதி புடுங்கிக்கிச்சி” டாக்டர் தலையில் அடித்துக் கொண்டு மாத்திரை எடுத்து வர ஆஸ்பிட்டலுக்கு ஓடினார். அப்போது கதாநாயகனுடைய காட்சி.. மேடையில நடித்துக் கொண்டிருக்கிறான்.

அடுத்து பதினைந்து காட்சிக்குள் கதை வளர்ந்து, கதாநாயகனுக்கும் கதாநாயகிக்கும் கல்யாணம் நடந்து முடிந்து, ஒரு பாட்டிலேயே குடும்பம் பெருசாகி விட்டது. ஐந்தாறு குழந்தைகள். கொஞ்சம் கொஞ்சமாய் குடும்பம் வறுமையான நிலைமைக்கு மாறிவருகிறது. சோகத்தில் குடி பழக்கத்திற்கு அடிமையாகின்றான். உடல் நலம் கெடுகிறது. அடுத்து பதினாறாவது காட்சியில் ஆஸ்பிட்டல் காட்சி. கதாநாயகன் உடல்நலமில்லாமல் டாக்டரிடம் வருகிறான். குளிருக்கு சால்வை போர்த்திக் கொண்டிருக்கிறான். இருந்தும் உடல் உதறுகிறது. டாக்டர் செக் பண்ணிக்கிட்டு இருக்கும் போதே கதாநாயகன் மயங்கி பொத்தென்று கீழே விழுகிறான். டாக்டர் கத்துகிறார்

“ஸ்டாஃப்... ஸ்டாஃப்! இன்ஜெக்ஷன் கோரமின் லோட் பண்ணுங்க. க்விக்.. சிஸ்டர்...சிஸ்டர்” ஸ்டாஃப் நர்ஸ் வரவில்லை. இந்தச் சீனுக்காகவே நர்ஸ் தேவியை தயார் பண்ணி வைத்திருந்தார்கள். அந்தம்மாவும் சிரத்தையாக யூனிஃபார்ம் டிரஸ் போட்டுக் கொண்டு காத்திருந்தது. மேடையிலே இன்ஜெக்ஷன் பி12 ஐ

கதாநாயகனுக்கு நிஜமாகவே போட்டுட்றதாக ப்ளான். ரெண்டு தடவை கத்திய பிறகுதான் அந்தம்மா மேடைக்கு ஓடி வந்தாள். கையில் சிரஞ்சி இல்லை. ஒரு சூட்கேஸை தூக்கிக் கொண்டு வந்து நிற்கிறது. உள்ளே சுற்றுமுற்றும் தேடிப்பார்த்திருக்கிறாள். இன்ஜெக்ஷன் மருந்து, சிரஞ்ச், இரண்டுமே எங்கேயும் காணவில்லை. வேற வழியில்லாமல் அந்தம்மா அங்கே கிடந்த சூட்கேஸை தூக்கிக்கிட்டு தேமே என்று வந்து மேடையில் நின்னுடிச்சி... டாக்டர் என்னவென்று தலையாட்ட, அந்தம்மா உரக்க,

“சிரஞ்சி கம்பவுண்டர் ஜோபியில இருக்குதாம்.” என்று கீழே கை காட்டினாள்.. சிரஞ்சும், இன்ஜெக்ஷன் பி12ம் கீழே மயங்கிக் கிடக்கிற கம்பவுண்டர் கதாநாயகன் பேண்ட் பாக்கெட்ல மாட்டிக்கிச்சி. டாக்டராக நடிக்கும் சுகாதார ஆய்வாளருக்கு தாங்க முடியாத கோபம். பாவம் இதுக்காக அவர் ரஜினி ஸ்டைல்ல சிரஞ்சை உயர தூக்கிப் போட்டு கேட்ச் பிடிச்சி, அதே வேகத்தில் ‘நச்சக்’ என்று கதாநாயகனுக்கு ஊசி போட்ற மாதிரியெல்லாம் ஒரு வாரமா ஸ்டைல் பிராக்டிஸ் பண்ணி வெச்சிருந்தார். தன் ஸ்டைல் பிடிக்காம அதை கெடுக்கிறதுக்காகத்தான் இந்த கம்பவுண்டர் பொறாமையில இப்படி சிரஞ்சை தன் ஜோபியில வெச்சிக்கிட்டு வந்து படுத்துட்டான். பாவி இப்படி டீல்ல விட்டுட்டானே எப்படித்தான் சமாளிக்கிறது?. என்று கீழே குனிஞ்சி ஆத்திரத்துடன் “யோவ் பாவி, என்னா மசுருக்குய்யா நீ சிரஞ்ச ஜோபியில வெச்சிங்கீற?. நான் எப்படிய்யா சமாளிப்பேன்?. பாவி... பாவி... த்தூ!.” என்றார். கம்பவுண்டர் மெதுவாக “சமாளி... சமாளிய்யா”. “பண்றத எல்லாம் பண்ணிட்டு இன்னா மசுர நான் சமாளிக்கிறது?. உனுக்கு ஊசியும் கிடையாது ஒரு மசுரும் கிடையாது. நீயே எழுந்து உக்காருய்யா.”

இப்படி திரைக்கு பின்னால பேசவேண்டியதையெல்லாம் அவங்க கோபத்தில் மேடையிலேயே மறைப்பு இல்லாமல் பேசினாலும் குரலை அடக்கித்தான் வாசித்தார்கள் என்றாலும் அது எல்லா ஸ்பீக்கர்களிலும் ஒலிபரப்பாகி விட்டது. கூட்டத்தில் பயங்கரச் சிரிப்பு. அடுத்து கதாநாயகன் அவனே எழுந்து உட்கார, மேடைக்கு கிட்டே உட்கார்ந்திருந்த ஜனங்களுக்கு. நடந்த குளறுபடிகள் அத்தனையும் ஒண்ணு விடாம தெளிவாகப் புரிய, இன்னும் அதிகமாக விழுந்து விழுந்து சிரித்தார்கள். முன் பக்க ஸ்கிரீனை இறக்கி விட்டுட்டு இரண்டு டாக்டர்களும் கோபமாக ஒப்பனை அறைக்குள் நுழைந்தார்கள்.

“என்னய்யா ரெண்டு சீன்லியும் இப்படி சொதப்பிட்டீங்க?. பி.இ.இ சார் இன்னா கர்மம். ஏன்யா உனக்கு டயலாக்கே ரெண்டே ரெண்டு வாக்கியந்தான், அதைக் கூட ஞாபகம் வெச்சிக்க முடியலையா?.”

“அதில்ல சார் எஸ்..எஸ்..ப்ரசீட், அப்ஜெக்ஷன் ஓவர் ரூல்டு. இதுல எதை அப்ப சொல்லணும்னு குழம்பிட்டேன் சார்,”

“போவட்டும் கடைசி சீன்லயாவது ஒழுங்கா நடிச்சித் தொலையுங்க. சரியா?. எல்லாரும் பொறுப்பா நடிச்சி பேரெடுங்க. அதிகாரிகள் ஏன் வந்திருக்காங்கன்னு யாருக்காவது தெரியுமா?.” எல்லாரும் அமைதியாக நின்றார்கள்.

“தெரியாதில்ல?. நீங்க நல்லா நடிச்சா மாவட்டம் பூரா எல்லா ஆஸ்பிட்டல்களிலும் நாடகம் நடத்த நம்ம குழுவையே அப்ரூவ் பண்ணலாம் என்ற ஐடியாவில வந்திருக்காங்க. பணமும் கிடைக்கும். இதே போல வேற மாவட்டத்தில எங்கியோ நடக்குதாம். ஸோ ஜாக்கிரதை. என்ன கதாநாயகன் சார். என்ன அப்பப்ப

பாதியிலேயே சீனை கட் பண்ணிட்டு மேடைக்கு பின்னால ஓட்றீங்க?. என்ன பேதியா?. ஆமாம் சார். இப்ப சரியாயிட்டுது சார். சிப்ளாக்ஸ் டி.இசட் டேப்லெட்டை சாப்பிட்டுட்டேன் சார்.'' ''ஃபங்ஷன் நேரங்கள்ல எப்பவும் திட்டமா சாப்பிடணும்.. உடம்பை கெடுத்துக்கக் கூடாது.'' சொல்லிவிட்டு அத்துடன் டாக்டர்கள் வெளியேறினார்கள்.

அடுத்து டைரக்டர் விசில் கொடுக்க திரை தூக்கப்பட்டு அடுத்த சீன் ஆரம்பித்தது நடிகர்கள் இப்போது ஈடுபாட்டுடன் நடிக்க ஆரம்பித்தார்கள். அடுத்த பத்து காட்சிகளுக்கு மேல் சிறப்பாக நடந்தது. கதாநாயகன் குடும்பக் கட்டுப்பாட்டை கடைபிடிக்காமல் வசவசவென்று குழந்தைகள் பெற்றுக் கொண்டதால் ஏற்பட்ட வறுமை நிலையை படிப்படியாக காட்டும் காட்சியில் எல்லா பாத்திரங்களும் நன்றாகவே நடித்தார்கள். கம்பவுண்டர் கதாநாயகன் மனைவியுடன் அழும் காட்சிகளில் சும்மா சொல்லக் கூடாது அழுது தீர்த்து விட்டான். ஆஜானுபாகுவான அந்த உருவம் இப்படி மாய்ந்து மாய்ந்து அழும்னு நாங்க யாரும் எதிர்பார்க்கவில்லை. அதிகப்படியான ஆர்வத்தில், சற்று மிகையாகவே அழுதான். கதாநாயகனின் குழந்தைகளாக நடிக்க ஊருக்குள்ளே இருந்து வயசு வாரியாக பொறுக்கி எடுத்து கூட்டி வந்த எட்டு குழந்தைகள் கூட அழற மாதிரி சூப்பராக நடிச்சதுங்க. பின்னணியில் முகவீணையின் ஸோலோ இசை முகாரியில் சோகத்தைப் பிழிந்தது.

ஒரு சீனில் கதாநாயகனுக்கு எட்டு பிள்ளைகள், வறுமையான வாழ்க்கை. அந்த நேரம் மனைவிக்கு உடம்பு சுகமில்லை, ஹார்ட் அட்டாக். சீரியஸ். செலவழிக்க பணமில்லை. அரசு மருத்துவ மனையில் ஐசியூவில் சேர்த்து வெச்சிருக்கு. அவன் சோகமாக மேடையில் குறுக்கும் நெடுக்கும் நடக்க பின்னணியில் ''எட்டை பெத்த பழனியப்பா அடேங்கப்பா'' என்று பாடல் ஒலிக்க வேண்டும் இதற்குமட்டுமே உருக்கமாக பாட்டு பாடவும், தபேலா வாசிக்கவும் தனியாக பக்கத்து ஊரிலிருந்து ரெண்டு பேரை செட் பண்ணி கூட்டி வந்திருந்தோம். அவர்கள் ஒப்பனை அறையில் உட்காந்து பாடவும், வாசிக்கவும் செய்ய வேண்டும் என்பது ஏற்பாடு. மேடையிலே கதாநாயகன் குறுக்கும் நெடுக்கும் நடக்க ஆரம்பித்து விட்டான். அடச்சீ! இவன் வேற சோகப்பாட்டு பாட்றப்ப கூடவாய்யா ஒருத்தன் வேகமான ரஜினி நடை நடப்பான். ஹ..ஹ..ஹ..ஹா ன்னு ரஜினி இளிப்பு வேற. டைரக்டர் மறுபடியும் தலையில் அடித்துக் கொண்டார். கதாநாயகன் திரும்பித் திரும்பி உள்ளே பார்க்கிறான். பாட்டு ஒலிக்கவில்லை. என்னாச்சி?.

அந்த நேரத்துக்குத்தானா பாடுகிறவனுக்கும், தபேலாகாரனுக்கும் அவசரமாக ஒருத்தனுக்கு யூரினும், ஒருத்தனுக்கு இன்னொன்றும் வரணும்?. வுட்டான் காடி. டைரக்டருக்கு ஒண்ணும் புரியல. மேடையில கதாநாயகன் ஒண்ணும் புரியாம தொடர்ந்து நடந்துக்கிட்டே இருக்கான். ஜனங்க விஷயத்தை சுலபமாகப் புரிஞ்சிக்கிடவும் ஒரே விசில், கத்தல். டைரக்டர் அய்யோ என்று கதறிக் கொண்டே மைக்கை தூக்கிக்கிட்டு உள்ளே ஓடினாரு. உள்ளே பி.இ.இ கோபால் சார் அரிதார முகத்துடன் உட்கார்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். அவருக்கு இன்னும் ஒரு சீன் பாக்கி இருக்கிறது. டைரக்டர் சுற்றுமுற்றும் பார்த்தாரு. அங்கே கழட்டி வெச்ச கதவு ஒன்னு சாத்தி வெச்சிருந்திச்சி. ஓடி மைக்கை கதவு கிட்ட வெச்சிக்கிட்டு கையால அவரே கதவுல தாளம் தட்டி அவரே பாடவும் ஆரம்பிச்சிட்டாரு. எட்டை பெத்த பழனீயப்பா அடேங்கப்பா.... என்ன பாடினது சகிக்கல. ராகமாக இல்லாமல் கவிதை வாசிக்கிற மாதிரி இல்லை இல்லை வசனம் பேசற

மாதிரி ஆயிப்போச்சி. அப்பா எப்படியோ ஆடியன்ஸுக்கு தெரியாம ஒப்பேத்தியாச்சி. அதுக்கப்புறம் ஏழெட்டு காட்சிகளுக்கு நடிகர்கள் குறை சொல்ல முடியாத படிக்கு உணர்ந்து நன்றாகவே நடித்தார்கள். இடையில் கதாநாயகனுடைய மனைவி இறந்து விடுகிறாள். கதாநாயகன் கதறுகிறான். அப்போது குடும்ப நல பிரச்சாரகர் வந்து அவள் சாவுக்கு நீதான் காரணம் என்று குற்றம் சாட்டுகிறார். ஆம் நானே குற்றவாளி என்று கதாநாயகன் கதறி அழுகிறான்.

"அளவில்லாமல் எட்டு குழந்தைகளைப் பெற்றவள் இதுவரைக்கும் உயிரோடு இருந்ததே அதிசயம்பா. நான் பார்த்துக்கிட்டுத்தானே இருந்தேன். கடைசி ரெண்டு குழந்தைகளுக்கு முன்னாலேயே அந்தம்மாவுக்கு சிவியரா ரத்த சோகை. நான் உன்னிடமும், உன் மனைவியிடமும் எச்சரிக்கை பண்ணிக்கிட்டுத்தான் இருந்தேன். யார் கேட்டீங்க. என்ன பண்றது?." கதாநாயகன் அழுகிறான். இப்போது காட்சி மாறுகிறது. வறுமையின் கோரப் பிடியில் குழந்தைகளின் பசியைப் போக்க வழியின்றி, கதாநாயகன் திருட்டு வேலையில் ஈடுபட ஆரம்பிக்கின்றான். காட்சிகள் சுவாரஸ்யமாக நகருகின்றன.

இப்போது மீண்டும் ரொம்ப சோகமான ஒரு சீன். கதாநாயகன் தரித்திரக் கோலத்தில் இருக்க,அவனுக்கிருந்த ஒரே ஆதரவான அவனுடைய அப்பாவும் இந்த கட்டத்தில் இறந்து போகிறார். வேணுப்பிள்ளைதான் அப்பா. ஈமச் சடங்குகளுக்குக் கூட கையில பணமில்லை. மேடையில் உள் ஸ்கிரீன் அருகில் ஒரு பெஞ்ச் போட்டு அதில் அப்பாவின் பிணம் கிடத்தப் பட்டிருக்கு. தலைப்பக்கம் ஊதுபத்தி புகைந்துக் கொண்டிருந்தது. புயலைப் போல ஓடி வந்த கதாநாயகன்

"ஐயோ அப்பா எல்லாரும் என்னை வுட்டுட்டு போயிட்டீங்களே. எட்டு குழந்தைகளை வெச்சிக்கிணு நான் என்ன பண்ணுவேன்?" தத்ரூபமாக அழுது நடித்துக் கொண்டிருந்தார். கூடவே எட்டு குழந்தைகளும் கதாநாயகனைக் கட்டிக் கொண்டு ஓவென்று அழுதன. காட்சியில் சோகம் தெறிக்க, ஆர்மோனியம், முகவீணையின் இசை சோகத்தை பிழிந்தெடுத்தன மக்கள் அமைதியாக பார்த்துக் கொண்டிருந்தார்கள். கதாநாயகன் ஆர்வக் கோளாறினால் அப்பா அப்பா என்று ஆவேசமாய் கத்தி அப்பனைப் பிடித்து உலுக்க, பென்ச் ஏற்கனவே ஸ்திரமாக இல்லாமல் ஒண்டடுக்காய் ஆடிக்கிட்டு இருந்திருக்கும் போல. பென்ச் உள் பக்கம் சாய, நாலரை அடி உயர மேடை, ப்ளஸ் பிணம் இருக்கிற பென்ச் உயரம் இரண்டரை அடி, ஆக விழுந்தால் உள்பக்கம் மொத்தம் ஏழடி அடிக்கு கீழே தரையில விழணும்..பென்ச் சாய, பிணம் ஐயய்யோ... ஐயய்யோ. என்று கத்தியபடி எழுந்து ஓட ஆரம்பித்தது, கூட்டத்தில் சிரிப்பு அடங்க ரொம்ப நேரமாகிப் போச்சி.

இப்படி நாடகத்தில் முதலில் இருந்து கடைசி வரைக்கும் இதுவரை நாடகத்தில் சொல்லாமல் விட்ட இன்னும் சில சொதப்பல்களும், குளறுபடிகளும், மேடைக்கு வந்து வசனம் மறந்து போய் உள்ளே ஓடிய காட்சிகளும், அரங்கேறி நாடகத்தை படு கலகலப்பான சிரிப்பு நாடகமாக மாற்றி விட்டன. அதில் குடும்பக் கட்டுப்பாடு பிரச்சாரமும், கதையின் சோகமும் அமுங்கிப் போனது நிதர்சனம்..

இறுதிக் காட்சியில் கதாநாயகன் தன் குழந்தைகளுடன் பரிதாபமாக நிற்கிறான். பின்னணியில் "சித்திரத்தின் சிரிப்பினிலே நான் சீர்குலைந்து வாழுகின்றேன்." பாடல் ஒலிக்கிறது.

மங்களம் சுப மங்களம். அதிகாரிகள் எதுவும் சொல்லாமல் கிளம்பிப் போய்விட்டிருந்தனர்.

thithanaa@gmail.com ■

கவிதை

வலங்கைமான் நூர்தீன்

# நட்சத்திரங்களை நிலமெங்கும் தெளிப்பவன்

அவனுக்கு குளிரெடுக்கும் இரவில் வாளைச் சுழற்றுகிறான்.
காற்றைக் கிழித்த அதன் வேகம்
இருளையும் காகிதங்கள் போல் கிழித்துப்போடுகிறது.
அதன் கூர் சத்தம் வானம் எட்டி வெட்டியதில்
தூரத்தில் ஒளிர்ந்து விழும் நட்சத்திரங்களுக்கு வால்கள் இல்லை.

இருளில் சுழலும் வலதுகையோடு தாரகைகள் பொறுக்கி நடப்பவன்,
மகுடம் இழந்த வாதையில் பேதலித்திருந்தான்.
புரவியின் நிழல் போல் அவன் கூட வரும் நிசி,
நிலவை விழுங்கும் அரவமாய் ஒளியின் வேகத்தில் பறக்கிறது.

குளம்படிச் சத்தங்கள் நெஞ்சத்தில் தடதடக்க
கனைக்கும் கடிவாளங்கள் விழிகளறைய,
பிசுப்பிசுத்த இரவு, பிசாசாய் பின்னால் வருகிறது.
அதன் கூரிய நகங்கள் போர்க்களத்தில் சுழலும் இரும்பாய்,
புறமுதுகில் வருடும் விரல்கள் கேடயத்தை தவறவிட்டவனின்
மார்பில் ஈட்டிகளை செருகிக்கொண்டிருக்கின்றன.

தேசம் இழந்தவனின் கானகம் நரகத்தின் கொடுரம்.
எல்லாம் பறிகொடுத்தவனின் கரங்களில்
மின்னிக்கொண்டிருங்கும் நட்சத்திரங்களை
நிலமெங்கும் தெளிக்கிறான்.
நிசப்தமாய் ஒளிரும் அவைகளால்,
காலுக்கடியில் வானத்தை வசமாகிய கர்வத்தில்
கரைந்து போனவனை யார் தேடப்போகிறார்கள்.
விடியல் சூரியன் பிரபஞ்சத்தின் கிரீடமாய் தகதகக்கிறது.

nfayha@gmail.com ■



கட்டுரை

மு.இராமசுவாமி

# ‘நடுவுக்குப் பின்னாலே பக்கத்தையே காணோம்’ என்கிற ‘திராவிட இயக்க நாடக மரபு’!

‘திராவிட வடிவமைப்பு’ / ‘திராவிட மாதிரியம்’ என்பதாய் பண்பாட்டுத் தடத்தில் அடையாளங் கொண்டு நிற்பது, சனாதன மாயாவாத ‘ஆங்கார’த்தைத் தோலுரித்து, ‘எல்லோருக்கும் எல்லாமும்’ என்கிற பகுத்தறிவு ‘ஓங்கார’த்தை, எரியூட்டியாய் உயர்த்திப் பிடித்துக்கொண்டிருக்கும் ‘மனு’வழி அல்லாதாரின் சமூகநீதிக் கருத்தியலாகும். அந்தவகையில் எல்லாத் தளங்களிலும் ஆக்கிரமித்திருக்கும் சனாதன ஆரியப் பண்பாட்டைக் கீறி எடுத்து, அதில் திராவிடக் கருத்தியல் விதையைத் தூவுகிற அவர்களின் தொடர் முயற்சிகள் - எழுத்து, பேச்சு, பத்திரிகை, இசை, நாடகம், திரைப்படம், சின்னத்திரை, ஊடகவெளி என்பதாய்ப் பல்வேறு வகைமைகளில்-நீளக்கூடியன. நீதிக்கட்சி தொடங்கி, திராவிட இயக்கங்கள் தமிழ்ப் பண்பாட்டுத் தளத்தில், ஒடுக்கப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்கள் நலனுக்காகச் செய்திருக்கிற காரியங்கள், எதிர்கொண்ட வழக்குகள், இந்தியாவிற்கே முன்னோடியாக விளங்குகின்றன. திராவிட இயக்கச் சமநீதி / சமூகநீதிச் சிந்தனையைப் பொதுமக்கள் மனதில் அறிவாய்க் கட்டியெழுப்ப, அவர்கள் மேற்கொண்டிருந்த கலை, இலக்கியப் படைப்பு முயற்சிகள் அனைத்தும் அண்ணாந்து பார்க்கவைக்கக் கூடியன. பண்பாட்டுத் தடத்தில், படைப்புத் தடத்தில், எதுவொன்றையும் - எந்த வகைமையை மட்டும் விட்டு வைத்திருக்கிறார்கள் என்பதற்கு கிளறிக்கிளறிப் பார்த்தாலும் எதுவும் சிக்குவதாயில்லை. சூரியனின் கீழே எதுவெல்லாம் பாகுபாட்டைப் பேசி, சமநீதிக்கு, சமூகநீதிக்குக் குந்தகமான கருத்தியலைக் கொண்டிருந்ததோ, அதையெல்லாம் பகுத்தறிவுக் கடப்பாறையினால், இண்டு இடுக்குகளைத் தேடித்தேடி இனம்கண்டுக் களமாடியிருக்கிறார்கள் திராவிட இயக்கத் தலைவர்கள் முதல் தொண்டர்கள் வரையும்! - அவரவர்களின் தோதிற்கேற்ப!

கலை இலக்கிய வகைமைகள் ஒவ்வொன்றிலும், திராவிட இயக்கச் சிந்தனைத் தடத்தைப் பதியமிட்டோரின் பங்கேற்புகளைப் பற்றியும் அவர்களின் படைப்பு ஆளுமைத் திறன்களைப் பற்றியும் பேசுவதற்கும், எழுதுவதற்கும் எண்ணிறந்த தரவுகள் கொட்டிக் கிடக்கின்றன - ‘பழைய நெனப்புடா பேராண்டி’ - கதையாய்! நூறு நூறு பூக்களாய், நூறு நூறு சிந்தனைகளாய், நாளும், காலத்திற்கேற்ப, சமூகத்

தேவைக்கேற்பத் தன்னைப் புதுப்பித்துக்கொண்டே தொடர்ந்து செயற்பட்டுக் கொண்டிருப்பதல்லவா கலை, இலக்கியங்களின் அரும்பணி! நிகழ்த்துகையில் கலையாயும் எழுத்துவகையில் இலக்கியமாயும் மிளிர்ந்து - பார்த்துக்கேட்டு மகிழ்கிற - கலையாகவும் இலக்கியமாயுமிருக்கிற 'நாடகம்' என்கிற 'திராவிடக் கருத்தியல் மர'பை மட்டுமே இங்குப் பேசுபொருளாக்கிக் கொள்வோம். பெரியார், அண்ணா, கலைஞர், பாவேந்தர், நடிகவேள், நடிப்பிசைப் புலவர், நடிகர் திலகம், இலட்சிய நடிகர், கலைவாணர், மக்கள் திலகம், திருவாரூர் தங்கராசு, இளங்கோவன், ஜலகண்டபுரம் கண்ணன்... என்று திராவிட இயக்க அரசியலுக்கும் நாடகப் படைப்புகளுக்கும் பாலமாய் இருந்தவர்களைப் பட்டியல் போட்டுக்கொண்டே, 'எங்கள் தாத்தாவிற்கொரு யானை இருந்ததென்கிற கதையாய்' இன்னும் எத்தனையெத்தனைக் காலத்திற்கு, அதையே சொல்லிக் கொட்டாவிவிட்டுக் குதூகலித்துக்கொண்டு இருக்கப்போகின்றோம்? என்கிற கேள்வி ஒருபுறமிருந்தாலும் அதை உள்வாங்கி, அதனின்றும் மடை மாற்றிப் புதிய இளம் தலைமுறையினர் எடுத்தெறிந்துவர ஊக்கச் சக்தியாய், இன்றைக்குப் பல்வேறு பயிலரங்குகள், அரங்கக் கூட்டங்கள், தெருமுனைக் கூட்டங்கள், இணையக் கூட்டங்கள், திரையிடல்கள், நூல் வாசிப்புக் கூட்டங்கள் என்று பெரியாரை உயர்த்திப் பிடிக்கும் ஒவ்வொரு அமைப்பிலிருந்தும், திராவிடச் சிந்தனைப் பரப்புரை, தொடர்ந்து நடைபெற்று வருவது, நல்லதோர் அறிகுறி! அவையெல்லாம் கருத்தை, சிந்தனையைக் கூர்முனையாய்க் கொண்டுசேர்ப்பதற்கான களங்கள் - பாராட்டப்பட வேண்டியவை! ஏனெனில் திராவிட இயக்கத்தின் பகுத்தறிவுக் கருத்தியலை மக்களிடம் உறுதிப்படுத்தவேண்டிய காலத்தேவை இன்றைக்குத் தீவிரமாகவும் அவசியமாகவும் ஏற்பட்டிருக்கிறது. ஆரிய ஆதிக்கக் கருத்தியல் தளத்திலான, பார்ப்பனீய-மனுதரும வருணாசிரமச் சிந்தனை வடிவமைப்பின் சமூக, அரசியல், பொருளாதார, காவி பாசிச - கார்ப்பரேட் நடவடிக்கைகளைப் பகுத்தறிவால் எதிர்க்கவேண்டிய பெரும் பொறுப்பு, திராவிடச் சிந்தனையாளர்க்கு வேறு எவரினும் இன்னுமே கூடுதலாக வேண்டப்படுகிறது. அரசியல், பண்பாட்டுத் தளத்திலான பாகுபாட்டிற்கும், மனித வெறுப்பு அரசியலுக்கும் வித்திடும் இந்துத்துவ-பார்ப்பனியத்தை எதிர்கொள்ளும் பெரும்பணியில், மனித நேசத்தை முன்மொழியும் சம/சமூக நீதிக்கான போர் பரணியாய்த் திராவிட இயக்கத்தவர் மக்களைத் திரட்டிச் செயல்பட வேண்டிய காலத்தின் கட்டாயத்திலிருப்பது மகிழ்ச்சி தருகிறது. ஆயின், அவ்வரிசையில் நாடகம் என்கிற கலைப் படைப்பின் தேக்கம் குறித்தும், அல்லது திராவிட இயக்க நாடக மரபில், காணாமல் போயிருக்கிற பக்கங்களுக்கான தேடுதலை எங்கிருந்து தொடங்குவது என்பது குறித்தும் இங்குப் பேச வேண்டியதிருக்கிறது. 'திராவிட இயக்க நாடக மரபு' என்பது புராண, இதிகாச ஆரியப் புனைவுக் கருத்தாடலுக்கு எதிரான, பகுத்தறிவைப் பரப்புரை செய்யும் ஒரு கருத்தாடல் என்று நம் வசதிக்காக எளிமைப்படுத்திக் கொள்ளலாம். ஏனெனில் திராவிட இயக்கம் என்பதே பகுத்தறிவுப் பிரச்சார இயக்கம்தானே!

திராவிட இயக்கச் சிந்தனையில் முழுவதுமாய் முழுகி எழுந்து, நாடகத்தில் வசீகரமாய் முகம் பார்க்கும் நாடகக்காரர்கள் எத்தனைப் பேர் இன்னமும் ஆற்று நீர் ஓட்டமாய்ச் சீராக நிகழ்காலத்தின் பார்ப்பனீய அதிகார அறிவாதிக்கப் படையெடுப்புக் கதைகளை

நாடகமாய் நிகழ்த்திக் கொண்டிருக்கின்றனர்? திராவிட இயக்கத்தவரின், ஒரு காலத்திய நாடகச் செயற்பாடுகள் பற்றிய ஆச்சரியங்கள், மண்டைக்குள் மத்தாப்பாய்ப் பளிச்சிட்டுக் கொண்டுதானிருக்கின்றன. திரைத்துறையின் மேல் மாடத்தில் உப்பரிகையில் உலவிக்கொண்டிருந்த அந்த நேரத்திலும் இயக்க மாநாடுகளில் நாட கங்கள் நிகழ்த்திக் கொண்டிருந்த எம்.ஜி.ஆர், எஸ்.எஸ்.ஆர், கே.ஆர்.ஆர், எம்.ஆர்.ஆர் ஆகியோரின் நாடகத் தொடுப்புகள், இப்பொழுது மல்லாந்து கிடந்து வானத்து நட்சத்திரங்களை மட்டும் எண்ணிக் கொண்டிருப்பது ஏன் நிகழ்ந்தது? திராவிட இயக்கப் பள்ளிச் சிந்தனையின் நாடகச் செயற்பாடுகளைப் பொறுத்தவரையும், 1930 களிலிருந்து 1970 வரைக்குமான காலத்தில், 'ஆரிய மாயை' யின் பேய்ச் சூறையை எதிர்த்துப் பயணப்பட்ட, திராவிட இயக்கத்தவரின் நாடகக் கனபரிமாணங்களின் அடர்த்தி இப்பொழுது ஏன் கரைதட்டிக் கிடக்கிறது? அந்தப் பக்கங்களின் தொடர்ச்சி, நடுவில் எப்படி விட்டுப் போயிற்று? என்ன காரணம்? 'ஆட்சியை அடைவதே எல்லை; அதன்பின் நாடகம் என்பதே தொல்லை' என்கிற புதிய வாழ்வியல் சூத்திரங்கள் அவர்களுக்குள் வந்து சேர்ந்தனவோ?

1930 களின் தொடக்கத்திலும் இந்தப் பிரச்சனையானது இருந்துவந்திருக்கிறது என்பது, வரலாற்றின் பக்கங்களைப் புரட்டிப் பார்க்கையில் தெரிகிறது. இரண்டாவது மாகாண சுயமரியாதை மகாநாடு பற்றிய முதல் அறிவிப்பை வெளியிட்டிருக்கிற 1930 பிப்ருவரி 16 ஆம் நாளிட்ட 'குடி அரசு' இதழில், 'செங்கல்பட்டில் (முதல் மாகாண சுயமரியாதை மாநாடு) சிலர் ஏற்றுக்கொண்டபடி, மாநாடு இவ்வருஷம் மார்ச்சு அல்லது ஏப்ரலில் நடத்த வேண்டியது அவசியமானது. ஈரோட்டில் ஒரு வாரமாவது மகாநாடு நடத்த வேண்டும் என்று கருதுகிறோம். ஏனெனில், ஒவ்வொரு தினமும் இயக்கம் சம்பந்தமான வேறு மாநாடுகளும், தனித்தனி உபன்யாசங்களும், கண்காட்சிகளும், நாடகங்களும் நடத்திக் காட்ட வேண்டுமென்று சில நண்பர்கள் ஆசைப்படுகின்றனர்...' என்று அறிவித்திருந்தும் நாடகம் தொடர்பான பதிவுகள் எதுவும் மகாநாட்டு நிகழ்வுகளில் இடம் பெற்றிருக்கவில்லை... நாடகத்திற்கு, அங்கு இயக்க அமைப்பு சார்ந்து இடமேதும் இல்லாமலேதான் இருந்திருக்கிறது (மு.இராமசுவாமி, திராவிட இயக்கமும் கலைத்துறையும்: 2014; பக்.17-18). 'சந்திர-கமலா அல்லது சுயமரியாதையின் வெற்றி' என்கிற நாடக நிகழ்த்தல் பதிவுதான், 'குடி அரசு' இதழின் மூலம் திராவிட இயக்க நாடகத்தின் முதற்பதிவாய் அமைந்திருக்கிறது. 'திராவிடன், 'குடி அரசு' இதழ்களின் துணையாசிரியர் திரிசிரபுரம் ஆ.நடராஜன் அவர்கள் இயற்றிய இச்சமூக சீர்திருத்த நாடகத்தைத் திருச்சி முருகானந்த சபையார், மதுரையில் மேலமாசி வீதி 'நர்த்தன கான சாலா' கொட்டகையில், 26-12-1929 சனிக்கிழமை அன்றிரவு 9.30 மணிக்கு அதிவிமரிசையாய் நடத்துவார்கள்' என்றிருக்கிறது (மேலது; பக்.21). சிறுசிறு சீர்திருத்த நாடக முயற்சிகள் அங்கொன்றும் இங்கொன்றுமாய் நடந்துவந்தபோதும் நாடக நூல்கள் வெளிவந்திருந்தபோதும், 1930 களில் நிகழ்ந்த இயக்க மாநாட்டு நிகழ்வுகளில்கூட, 29-12-1929 இல் நிகழ்த்தப்பட்டதாய்ப் பதிவு பெற்றிருக்கிற இந்நாடகம் இடம்பெறாததன் காரணம் என்னவென்று தெரியவில்லை. அதுவல்லாமல் வேறு எந்த நாடகமும் அதில் பங்குபெற்றதாக எந்தப் பதிவுகளுமில்லை.

09-09-1934 அன்று, 'சீர்திருத்த நாடக சங்க'த்தாரால், சென்னையிலுள்ள

விக்டோரியா பப்ளிக் ஹாலில் மாலை 5.30 மணிக்குப் பெரியார் தலைமையில் நிகழ்ந்த புதுவை பாரதிதாஸன் (பாவேந்தர்) இயற்றிய 'இரணியன்' (பிற்பாடுதான் அது, 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' என்றாகியிருக்கிறது) நாடகம்தான் ஆரியர் - திராவிடர் இனப் பிரச்சனையை முன்வைத்து பழைய புராணத்தைப் புரட்டிப்போட்டு, திராவிடர் இயக்கச் சிந்தனைகளை முன்வைத்து நிகழ்ந்த, தடையை எதிர்கொண்ட மிகப்பெரும் நாடகமாகத் திகழ்கிறது (மேலது; பக்26). ஓமந்தூரார் ஆட்சிக் காலத்தில், திராவிடர் கழகம் 59 நாட்கள் நடத்திய அறப்போர் - இரண்டாம் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின் போது - 28-08-1948 அன்று பாரதிதாசனின் 'இரணியன்' நாடகம் தடை செய்யப்பட்டது. தடையை மீறிப் பல ஊர்களில் இரணியன் வேடத்தோடு தொண்டர்கள் கைதாகினர். இந்த நாடகத்தின் வீச்சு எப்படியானது என்பதைப் பற்றி, 'திராவிட இயக்கமும் கலைத்துறையும்- நாடகக்கலை எதிர்கொண்ட கலகங்கள்' நூலில் (பக்.45-49) கூறியிருப்பவற்றை அப்படியே மீண்டும் இங்கு எடுத்தாளலாம் - 'வெள்ளையரிடமிருந்து அரசியல் விடுதலை பெற்ற சுதந்திர இந்தியாவில், 1948 இல், நாடகத் தடைச் சட்டம் தன் கரங்களை 'இரணியன் அல்லது இணையற்ற வீரன்' நாடகத்தை நோக்கி நீட்டியது. அதை மீறிக் காஞ்சிபுரத்தில் திராவிட நடிகர் கழகத்தினர் (1943 இல் காஞ்சிபுரத்தில் அண்ணாவால் தொடங்கப்பட்டது) இந்நாடகத்தை நடித்ததால் அவர்கள் கைது செய்யப்பட்டனர். இந்நாடகத்தில் நடித்த காஞ்சிபுரம் தோழர்கள் சம்பந்தன், கிருஷ்ணமூர்த்தி, நாராயணசாமி, கச்சிராப்பாளையம் உள்பட பலருக்கு 143 ஐபிடி செக்ஷன்படியும், 1876 ஆம் ஆண்டு டிராமா ஆக்ட் 19 ஆவது ஆக்ட் 6ஏ செக்ஷன்படியும் குற்றம் சுமத்தி, மூன்றுமாதக் கடுங்காவலும் ரூ.50/- வீதம் அபராதமும் அதைக் கட்ட மறுத்தால் மேற்கொண்டு மூன்று வாரம் சிறை தண்டனையும் விதிக்கப்பட்டு நீதிமன்றத் தீர்ப்பு வழங்கப்பட்டதாக 19-09-1948 நாளிட்ட 'திராவிட நாடு' இதழ் கூறுகிறது. அதில், 'தோழர்கள் மூன்று மாதமும் மூன்று வாரச் சிறைத் தண்டனையும்' என்ற தலைப்பில் வெளியாகியிருந்த செய்தியில் நீதிமன்ற விசாரணையில், இயக்கத் தோழர்களான நாடகக் கலைஞர்களின் இயக்கத்தின் மேலான உறுதி பதிவாகியிருக்கிறது. அது,

*பூங்காவனம்: அந்த நாடகத்தில் என்ன குற்றம் கண்டு தடைவிதித்தனர்?*

*நீதிபதி: அது சர்க்காருக்குத்தான் தெரியும்!*

*பூங்காவனம்: அப்படியானால் சட்டத்தை மீறவே நடித்தோம்!*

*நாராயணசாமி: எங்குமே இல்லாத இந்தச் சட்டத்தை உடைக்கத்தான் ஆடினோம்.*

*சம்பந்தன்: தெரிந்துதான் ஆடினோம்.*

*கச்சிராப்பாளையம்: சட்டம் போட்டதே தப்பு. அதை உடைக்கவே நடித்தோம்.*

*எத்திராஜ்: தடை விதித்தது தெரியும். குற்றத்தை சர்க்கார் தெளிவுபடுத்தவில்லை. அதைப் பொது மக்களுக்கு விளக்கவே ஆடினோம். (அன்புச்செழியன், திராவிட இயக்க நாடகங்கள், முனைவர் பட்ட ஆய்வேடு, பக்.226)*

என்பதாகப் பதிலளித்துள்ளனர்... இது இயக்கத்தின்மீது, கழகத் தலைமையின்மீது, கழகத் தோழர்கள் - திராவிட நடிகர் கழகத்தின ர்- கொண்டிருந்த உறுதியைக் காட்டுகிறது. மூன்று மாத, மூன்று வாரக் கைதிற்குப் பின், விடுதலை செய்யப்பட்ட தோழர்களுக்குத் திராவிட இயக்கம் சார்பில், 22-12-1948 இல் வேலூர், மறுநாள் 23-12-1948 இல் திருவத்திபுரத்தில் என்று

பெரியார் முன்னிலையிலும், 25-12-1948 இல் காஞ்சிபுரத்தில் தோழர் அண்ணாதுரை முன்னிலையிலும் வரவேற்புகள் அளிக்கப்பட்டு உள்ளன. காஞ்சிபுரத்தில் நடைபெற்ற வரவேற்பிற்கு செங்கற்பட்டிலிருந்து தோழர் எம்.சின்னையா தலைமையில் நூற்றுக்கு மேற்பட்ட இயக்கத் தோழர்கள் நடைப்பயணம் மேற்கொண்டு, வழியெங்கும் 'பேசாப்பொருளாய் அனைவரையும் பேசவைத்து' அவ்வரவேற்பில் கலந்து கொண்டிருக்கின்றனர் என்பது 13-02-1949 நாளிட்ட 'திராவிட நாடு' இதழில் பக்.8 இல் ஒளிப்படத்துடன் பதிவாகியிருக்கிறது என்பது அவசியம் குறிப்பிடப்பட வேண்டியது (மேலது; பக். 243-245). நாடகத்தை மையப்படுத்தித் திராவிட இயக்கச் சிந்தனைகளை நடைப் பயணமாகப் பரப்புரை செய்து, மக்களிடம் அதை இயக்கமாக்கிக் கொண்டுசென்ற பெரு முயற்சி இது!... தடை செய்யப்பட்ட ஒரு நாடகத்தை முன்வைத்து, தலைவர்கள் முதல் தொண்டர்கள்வரை அதில் சம்பந் தப்பட்டு, அதைக் கொண்டாடி இயக்க வளர்ச்சிக்கு அதைக் காப்பீடாக்கிய ஒரு நடைப்பயணம் 75 ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் திராவிட இயக்கத்தால் முன்மொழியப்பட்டு, மக்கள் மனங்களில் இயக்கக் கருத்தைக் கொண்டு சேர்த்திருக்கிறதென்பது அடிக்கோடிட வேண்டியது. இது மிக முக்கியமானது. இத்தனை வீர்யம் கொண்ட நாடக முயற்சிகளின் தொடர் பக்கங்கள் 1970 க்குப் பின் எப்படிக் காணாமல் போயின? தொலைக்காட்சி வருகை செய்த திருவிளையாடலா?

அந்த வகையில் குறிப்பிட வேண்டியது, 25-08-1935 நாளிட்ட 'குடி அரசு' இதழில் திரு அ.இரத்தின சபாபதி எழுதியிருக்கிற 'நாடக மேடைகள் நமக்குப் பயன்பட வேண்டுமானால்...?' எனும் கட்டுரையாகும் (திராவிட இயக்கமும் கலைத்துறையும் - நாடகக்கலை எதிர்கொண்ட கலகங்கள், பக்.31-34). பகுத்தறிவுக் கொள்கையை மக்களிடம் பிரச்சாரம் செய்வதற்கு, அமைப்பின் ஒரு பகுதியாக நாடகங்கள் அமைய வேண்டியதன் தேவையை, ஒரு வேலைத் திட்டமாகவே அக்கட்டுரையானது கூறிச் சென்றிருக்கிறது.

அதன் முக்கியப் பகுதிகள் இப்படி அமைகின்றன: 'தமிழ்நாட்டில் நாடக மேடைகள் என்ன கருத்துடன் யாரால் ஆரம்பிக்கப்பட்டு இருந்தாலும் சரி, அதன் தற்கால நிலைமை எவ்வாறிருந்தாலும் சரி, சீர்திருத்தவாதிகளாகிய நாம் நாடக மேடைகளைக் கைப்பற்றி, நமது கொள்கைகளை நாடகங்கள் ரூபமாக வெளிப்படுத்தவேண்டும் என்பதும் அதனால் பெரும் பயன் விளையுமென்பதும் நம்மவர்களிற் சிலருக்கு வெகுநாட்களாகவே இருந்துவரும் அபிப்பிராயங்களாகும். எந்தக் கொள்கையைப் பொதுமக்களிடையில் பரப்ப வேண்டுமானாலும் அதற்குப் பிரச்சாரம் அவசியம் என்பதை எவரும் மறுக்க முடியாது... துண்டுப் பிரசுரங்கள், மேடைப் பிரசங்கங்கள், பத்திரிகைகள் முதலிய எல்லாவற்றையும்விட, நாடகங்கள், சினிமாக்கள் முதலியவற்றின் மூலமாய், கொள்கைகளை மக்களிடைப் பரப்புவது பெரிதும் சுலபமானதும், கோரும் நோக்கத்தை விரைவில் திருப்திகரமான முறையில் கிடைக்கச் செய்யும் சாதனமாகும் என்பதை, நம்மவர் ஓரளவிற்கு உணர்ந்திருக் கிறார்களென்றாலுங் கூட, நடைமுறையில் கொண்டுவருவதில் போதிய அளவு சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை என்பதுதான் எனது அபிப்பிராயம். நான் இவ்வாறு துணிந்து வெளிப்படையாகக் கூறுவதற்காகத் தோழர்கள் என்னை மன்னிப்பார்களாக. நமது கொள்கைகளைப் பொதுமக்களிடையே பரப்புவதற்கு நாம்

தமிழ் நாடகமேடையைக் கைப்பற்ற வேண்டுமென்னும் கருத்தை, நான் பலமுறைப் பொதுக்கூட்டங்களிலும் தனித்தனி நபர்களிடத்திலும் பேசியிருக்கிறேன். பத்திரிகைகளிலும் பலமுறை எழுதியிருக்கிறேன். என்னைப் பொறுத்தமட்டில் தனிப்பட்ட முறையில் இவ்வகையில் ஏதோ முயற்சி செய்தேனென்றாலுங்கூட, அம்முயற்சிகள் நல்ல பயனை அளிக்கவில்லை. காரணம் நம் இயக்கத் தோழர்கள் இத்துறையில் செயலாற்ற முன்வராததேயாம்' என்கிறார்.

மேலும், 'நாம் இவ்வாறு நாடகமேடைகளைக் கைப்பற்றுவோமானால் நாம் இரண்டு காரியங்களை ஏக காலத்தில் வெற்றிகரமாகச் செய்யக்கூடும் என்பதைத் தோழர்கள் கவனிக்க வேண்டும். முதலாவது: சீர்திருத்த நாடகங்களை நாம் நடத்த முற்படுவதோடு, தற்காலம் நடைபெறும் நாடகக் கதைகளிலுள்ள அறிவிற்குப் பொருந்தாதவற்றை அவ்வப்போது நாம் கண்டிப்பதால், அக்கதைகளுக்கு ஒரு பலத்த எதிரிடையான அபிப்பிராயத்தைப் பொதுமக்களிடையில், சிறப்பாகப் படித்தவர்களிடையில் உண்டுபண்ணக் கூடும். இரண்டாவது: நம் கொள்கைகள் கொண்ட நாடகங்களை நடத்துவதால் வெகு எளிதாகப் பாமர மக்களுக்கும் கொள்கைகளை விளக்க வைக்கலாம்; நடிப்புக் கலையும் சீர்படும்... இன்றைக்கு நம் நாடகங்களுக்கு வரவேற்பில்லாதது போல் தோன்றினாலும் எதிர்காலத்தில் நமக்கு நல்ல ஆதரவு கிடைப்பது திண்ணம். இதனை மனதில் வைத்துக்கொண்டு நாம் வேலை செய்வோம்... நம்முடைய முயற்சியில் உலக நிகழ்ச்சிகளைக் காட்டும் கண்ணாடியாக நாடக மேடையை அமைப்போம்' என்கிறார். இதன் முத்தாய்ப்பாக, 'நாட்டின் பற்பல இடங்களிலும் தனித்தனியாக நாடக ஸ்தாபனங்களை நாம் அமைத்துக் கொண்டாலும் கூட, நமக்கென்று ஓர் 'பொது சீர்திருத்த நாடக ஸ்தாபனம்' வேண்டும். அதன்முலம் நல்ல கவர்ச்சிகரமான சீர்திருத்த நாடகங்களை எழுதி வெளியிட வேண்டும்... பத்து ரூபாய்கள் கொண்ட பங்குகளாக 1000 பங்கு சேர்த்து, அதை மூலதனமாக வைத்துத் தக்க முறையில் நடத்துவோமானால் நமக்கு நல்ல பயன் ஏற்படுமென்பது நிச்சயம். இதனைத் தமிழர் நாட்டிலுள்ள நம் பொறுப்புள்ள தோழர்கள் கவனிக்க வேண்டுகிறேன்' என்று திட்ட யோசனையும் தருகிறார். இது 88 ஆண்டுகளுக்குமுன், 1935 இல் எழுதப் பெற்றதாக எனக்குத் தெரியவில்லை. இன்றைக்கு நான் என் அனுபவத்திலிருந்து பெற்ற என் மனதை அப்படியே அதில் கொட்டியிருப்பதாகவே எனக்குத் தோன்றுகின்றது. 25-08-1935 இல் 'குடி அரசு' இதழில் திரு அ. இரத்தினசபாபதி எழுதியிருந்த இந்தக் கருத்துகளின் அடியொற்றியே, 11-02-1944 இல் ஈரோடு சென்ட்ரல் கலையரங்கில் முதன்முதலாக நிகழ்ந்த 'தமிழ் மாகாண நாடகக் கலை அபிவிருத்தி மாநாட்டில், 'கலையின் நிலைமை' என்ற தலைப்பில் அண்ணா உரையாற்றுகையில், 'பங்குதாரர்கள் கொண்ட ஒரு லிமிடெட் கம்பெனி அமைக்கப்பட வேண்டும். அதிலே சீர்திருத்த நாடகங்கள் நடத்தப்பட வேண்டும். அதன் வருவாயை நாடகத் தொழிலாளருக்கு (போனசாக) இலாபப் பங்கீடாகத் தரப்பட வேண்டும்' என்று கூறியிருந்தார் (மேலது, பக்.41). ஆயின், அண்ணா பேசி 80 ஆண்டுகள் நெருங்கிக் காற்றின் பக்கங்களாய்க் கரைந்து போயும், இதுவரையும் இப்படியான முயற்சிகள் நடந்திருப்பதாகத் தெரியவில்லை.

திரு அ.இரத்தினசபாபதியின் நாடகக் குழுக்கள் உருவாக்க வேண்டிய தேவை குறித்த சிந்தனையைத் தொடர்ந்து- நாடக மேடைகளைக் கைப்பற்றுகிற அவரின் சிந்தனையைத் தொடர்ந்து- தமிழகத்தின்

பல பகுதிகளில் சீர்திருத்த நாடக சங்கம், திராவிட நடிகர் கழகம் [ஈரோட்டில் 'திராவிட நடிகர் கழகம்' ஒன்றைப் பெரியார் 1939 நவம்பர் 24 ஆம் நாள் தொடங்கிவைத்தார் / 'காஞ்சி திராவிட நடிகர் கழக'த்தை 1943 இல் அண்ணா ஏற்படுத்தி, தான் எழுதிய 'சந்திரோதயம்' நாடகத்தில் தானே மூன்று வேடங்களில் நடித்து, அந்நாடகத்தின் வாயிலாகத் 'திராவிடநாடு' இதழுக்கு நிதி திரட்டினார் / 1944 இல் 'சாந்தா அல்லது பழனியப்பன்' நாடகத்தைக் கலைஞர் எழுதி, நடித்துப் பின் 'நாகை திராவிட நடிகர் கழக'த்துக்குத் தந்திருந்தார் என்று கவிஞர் கருணானந்தம் 'தந்தை பெரியார்' (முழுமையான வரலாறு) நூலில் பக். 160/166/169 களில் குறிப்பிடுகிறார்], 'முத்தமிழ் நாடக சங்கம்' போன்ற பல்வேறு பெயர்களில் செயல்பட்ட நாடகக் குழுக்களின் நாடக முயற்சிகளைப் பார்க்க முடிகிறது. பட்டியல் பெருகக் கூடியது. ஊக்கத்தை ஊட்டுகிற வகையில், திராவிட இயக்க நாடகச் செயற்பாடுகளில் முத்திரை பதித்த ஆளுமைகளின் நாடக முயற்சிகளை மட்டுமாவது இங்குத் தொட்டுச் செல்வோம். இரணியனைத் தொடர்ந்து புரட்சிக் கவிஞரின் 'படித்த பெண்கள் (1944), நல்ல தீர்ப்பு (1944), அமைதி (1944), சக்திமுத்துப் புலவர் (1948), இன்பக் கடல் (1948), குடும்ப விளக்கும் குண்டுக் கல்லும் (1950), கழைக்கூத்தியின் காதல் (1951), ஆரிய பத்தினி மாரிமை (1951), தலைமுறை கண்ட தேவர் (1951), சேரதாண்டவம் (1954), பிசிராந்தையார் (19 54), குமரகுருபரர், கற்கண்டு' முதலிய நாடகங்களைப் பாவேந்தர் எழுதியிருக்கிறார். இவை நிகழ்த்தப்பட்டதற்கான சான்றுகள் எதுவும் தெரியவில்லை. ஆயினும், வடவர் ஆதிக்க எதிர்ப்பு, பார்ப்பனீய ஆதிக்க எதிர்ப்பு, சாதி, மத ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு எனும் கோபங்களையும், சுயமரியாதை, பகுத்தறிவு, தமிழ்மொழிப் பற்று, பெண்ணுரிமை, சமவுரிமை எனும் குணங்களையும் தன் முகமாய் கொண்டிருந்த இந்நாடகங்கள் மூலம் திராவிட இயக்கக் கருத்துப் பரவல் நிகழ்ந்திருக்கிறது. அதைத் தொடர்ந்து, 'தமிழ்ப் புலவர் தனித் தமிழில் நாடகங்கள், படக்கதைகள் எழுத வேண்டும்' என்றுரைத்துத் தொடர்ந்து நாடக எழுத்து முயற்சிகளில் பாவேந்தர் ஈடுபட்டிருந்தது முக்கியமானது (மேலது, பக்.51-52).

'இரணியன்' நாடகம் 1948 இல் தடைசெய்யப்பட்டு, பின் திமுக ஆட்சியில் தடை முறிந்தபோதும் அந்த நாடகத்தை யாரும் எடுத்து நடத்தியதாகத் தெரியவில்லை. 2019 இல் புதுச்சேரி நாடகப் பள்ளியில் பயின்ற திரு சி. இராமசாமி அவர்களின் 'வெளிப்படை நாடக அரங்கம்' மூலம் பாவேந்த ரின் 'இரணியன்' நாடகத்தைச் சிறப்பாக, நவீன முறையில் வடிவமைத்து பலமுறை நிகழ்த்தியதாகத் தெரிகிறது. இந்நாடகத்தையும் அவர்களின் 'நடபாவாடை' எனும் இன்னொரு நாடகத்தையும் 24/25-06-2023 இல் நடைபெற்ற வெளிப்படை அரங்க இயக்கத்தின் பத்தாம் ஆண்டு நிறைவு விழாவில் பார்க்கிற வாய்ப்புக் கிட்டியது. அவை அப்பழுக்கற்ற வகையில் திராவிட இயக்க சிந்தனை மரபையே உரத்துப் பேசின. ஆயினும் தொடர் வாய்ப்புகள் அவர்களுக்கும் இல்லை என்பதே கள எதார்த்தம்! இதுபோக 1959 இல், பாவேந்தரின் 'தமிழச்சியின் கத்தி' குறுங்காவியத்தைக் காகா ராதாகிருஷ்ணன் குழுவினர் நாடகமாக நிகழ்த்தியுள்ளனர். பிற்பாடு நடிகர் திலகம் சிவாஜி நடிப்பதாக அறிவிக்கப்பட்டு, பின் என்ன காரணத்தினாலோ அத்திரைப்பட முயற்சியும் நின்று போனது. அதுபோல் பாவேந்தரின் 'அமைதி' நாடகமும் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர் நடிப்பதாகப் பெரிய அளவில் விளம்பரம்


தானே எழுதி, தானே நடித்த சந்திரோதயம் நாடகத்தில் மடாதிபதிகளாக அறிஞர் அண்ணாவும், கே.ஏ.மதியழகனும்

செய்யப்பட்டு, என்ன காரணத்தினாலோ அதுவும் நின்று போயிருந் தது. ‘புரட்சிக் கவி’யில் கவிஞர் சுரதா அமைச்சராக நடித்திருக்கிறார். 1991 இல் பாவேந்தரின் நூற்றாண்டிற்காக, இலாவணிக் கதை சொல்லலில், நிஜ நாடக இயக்கம் நாடகமாகத் தயாரித்திருந்த ‘புரட்சிக்கவி’ (1937இல் எழுதியது) குறுங்காப்பியத்தில் நான் மன்னனாக நடித்திருந்தேன். அரிச்சந்திரனாக இசை நாடகத்தில் ராஜாபார்ட்டாக நடித்துவந்த விளாத்திகுளம் அருகிலுள்ள கருங்குளம் பாலகிருஷ்ணன் ‘உதார’னாக நடித்து, பாவேந்தரின் பாடல்களால் அரங்கத்தைக் கட்டிப் போட்டிருந்தார்.

அண்ணாவின் ‘சந்திரோதயம்’ நாடகம் ‘திராவிட நடிகர் கழக’த்தினரால் 23-04-1943 இல் ஈரோடு டி.கே.எஸ் அரங்கில் பெரியார் தலைமையில் அரங்கேற்றம் செய்யப்பட்டது... 1934 இல் ‘இரணியன்’ நாடகத்திற்குக் கிடைத்த வரவேற்போடு இதை ஒப்பிடுகையில், 1943 இல் மக்கள் வரவேற்பில் ஏற்பட்டிருக்கிற மாற்றம் இயக்க வளர்ச்சியை நாடக நிகழ்த்தலின் மூலம் காட்டுவதாய் இருக்கிறது (மேலது, பக்.52). இதில் அண்ணா, ‘துரைராஜ்’ எனும் சீர்திருத்தம் பேசும் கதாபாத்திரத்தில் நடித்திருக்கிறார். ‘இந்த நாடகத்தைக் கண்ணுற்ற பெரியாருக்குக் கலைத்துறையின்மீது அதிக ஆவல் பிறந்தது. நம்மவர்கள் இந்தக் கலைகளை நன்முறையில் வளர்த்திட நாமும் மூன்று வகையான பிரிவுகளை உண்டாக்க வேண்டும். சினிமா, நாடகம் பார்க்கிறவர் கழகம், இசை நுகர்வோர் கழகம், பத்திரிகை படிப்போர் கழகம் - இவை நமக்கு அவசியம் என்றார் பெரியார்’ (கவிஞர் கருணானந்தம், ‘தந்தை பெரியார்’ (முழுமையான வரலாறு), 2007; பக்.169). ‘சிவாஜி கண்ட இந்து ராஜ்யம் அல்லது சந்திரமோகன்’ (1945), ‘வேலைக்காரி’ (1946), ‘ஓர் இரவு’ (1946), ‘நீதிதேவன் மயக்கம்’ (1947), ‘நல்லதம்பி’ (1948), ‘கல் சுமந்த கசடர்’ (1949), ‘காதல் ஜோதி’ (1953), ‘சொர்க்க வாசல்’ (1954), ‘பாவையின் பயணம்’ (1956), ‘கண்ணாயிரத்தின் உலகம்’ (1966) ஆகிய நாடகங்களைத் திராவிட இயக்கச் சிந்தனையாளர்களைக் கொண்டு நிகழ்த்தி அதன்மூலம், திராவிட இயக்கம் பொதுமக்கள் மனங்களில் கருத்துநிலையில் வலிவுபெற உழைத்தவர் அண்ணா! ‘சிவாஜி கண்ட இந்து ராஜ்யம் (அ) சந்திரமோகன்’ நாடகத்தில், அண்ணா, காகபட்டர் கதாபாத்திரத்தில் நடித்திருந்தார். இதில் ’சிவாஜி’ வேடத்தில் சிறப்பாக நடித்த வி.சி. கணேசனுக்குப் பெரியார் வழங் கிய பட்டம்தான் ‘சிவாஜி’ என்பது! அதுவே அவரை அடையாளப்படுத்தும் பெயராக இறுதிவரையும் நிலைத்திருந்தது. ‘நீதிதேவன் மயக்கம்’ நாடகத்தை, ‘பரீக்ஷா’ ஞாநி நிகழ்த்தியிருக்கிறார். ‘கல் சுமந்த கசட’ரில், திராவிட இயக்க முன்னோடிகளில் ஒருவரான நெடுஞ்செழியனும், ‘காதல் ஜோதியில் என்.எஸ்.கிருஷ்ணனும் நடித்திருக்கின்றனர்...’ இதோ ஒரு பெர்னாட்ஷா தமிழ்நாட்டில் இருக்கிறார்,

இப்சனும் இருக்கிறார், இன்னும் கால்ஸ்வொர்த்திகூட இருக்கிறாரென்று தோன்றுகிறது. நடிக்கக்கூடிய நாடகத்தை எழுதும் ஆற்றல் திரு அண்ணாதுரையிடம் பூரணமாக அமைந்திருக்கிறது' என்று 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி மதிப்பிட்டிருக்கிறார் (மு.இராமசுவாமி, திராவிட இயக்கமும் கலைத்துறையும்: 2014; பக்.60).

'...22-07-1956 நாளிட்ட 'திராவிட நாடு' இதழில், தன் 'தம்பிக்கு'க் கடிதத்தில் அண்ணன் அண்ணா துரை இப்படி எழுதியிருக்கிறார் - 'தம்பி, எங்கே உன்னுடைய நாடகக் குழு? இன்றே குழுவின் அவசரக் கூட்டம் நடைபெறட்டும்! நாடகம் தயாராகட்டும்! நாட்டு நலிவு பற்றிய விளக்கம், நாடாள வந்தவர்கள் தந்த வாக்குறுதிகள் யாவும் பொய்த்துப் போனது பற்றிய விளக்கம், நம்மவர் படும் துயரம், நாடாள்வோர் அதற்குக் கூறும் சமாதானம் - இவை பற்றிய நாடகங்கள், நால்வர், அறுவர், பதின்மர் கொண்ட குழுக்களால், எளிமையும் இனிமையும் கொண்ட முறையில், முச்சந்திகளில் நடத்திக் காட்டப்பட வேண்டுமே! நாமென்ன, குமாரி கமலா, சமூக சேவகி சாருபாலா, சங்கீத கலாநிதி சாம்பமூர்த்தி என்போர்க்குச் 'சன்மானம்' கொடுத்துச் 'சபை'யை ரம்மியமானதாக்கிக் காட்டவா முடியும்? நமக்கு நாமே! ஆனால் அந்த 'நாம்' என்பதிலே உள்ள திருவும் திறமும் சாமான்யமானதல்ல! அதை மறவாதே! உன் குறும்புப் பார்வை எனக்குப் புரிகிறது. தம்பி, புரிகிறது! அண்ணா! நாடகம் ஆடு என்று யோசனை கூறிவிட்டால் போதுமா? நாடகம் வேண்டுமே, எங்கே நாடகம்? என்றுதானே உன் பார்வை பேசுகிறது. பொல்லாதவனல்லவா நீ! சமயம் பார்த்து, என்னை வேலை வாங்கிப் பழக்கப்பட்டுப் போய்விட்டாய்! சரி! நாடகமும் தருகிறேன்! 'கூடு' மட்டும் - எழில் உருவம் அமைத்துக்கொள்ள உனக்கா தெரியாது - நாடகம் இது முதலாவது! இனி, தொடர்ந்து பல நாடகமும் தருகிறேன். உன் குழுவினைக் குதூகலமாகப் பணியாற்றச் சொல்லு'... ஒரு கட்சியின் தலைமைப் பொறுப்பிலிருப்பவர் (பொதுச் செயலாளர்), நாடகத்தின் இன்றியமையாமையைச் சொல்லி, நாடகம் நிகழ்த்தத் தன் தம்பியரிடம் சொல்வது மட்டுமின்றி, அவர்கள் நிகழ்த்த நாடகங்களும் எழுதிக் கொடுப்பதென்பது, நாடக வரலாற்றில் அழுத்தமாகக் குறிப்பிட வேண்டியதாகும்' (மேலது, பக்.60-61). இந்த இடத்தில் இந்தியத் திரையுலகச் சிற்பிகளில் குறிப்பிடத்தக்கவரான 'ரித்விக் கட்டக்' சொன்ன ஒரு கருத்தை நினைவிற் கொள்வது நல்லது- 'பேனா, பென்சில் வாங்கிப் பாக்கெட்டில் வைப்பதுபோல், சினிமா எப்பொழுது எளிமையாகிறதோ, அப்பொழுது நான் சினிமாவுக்கு வருவேன். அதுவரை, நாடகத்தில் நான் இயங்கிக் கொண்டிருப்பேன்' - என்னவொரு அனுபவ, அற்புத மொழி!

அண்ணாவின் தம்பியாய், அரசியலில் மட்டுமின்றி, எழுத்து, நாடகம், திரைப்படம், கவியரங்கம் என்று அவரை விடவும் அதிகமாய் எழுதிக் குவித்தவர் கலைஞர் மு.கருணாநிதி! திராவிட இயக்கப் படைப்பாளியாக, அண்ணாவிற்கு அவர் வாழ்ந்த காலத்திற்குள் அமைந்துவராத வாய்ப்பு, கலைஞருக்கு அவர் வாழ்வில் கிடைத்திருந்தது - அது சின்னத்திரை படைப்பாளி என்கிற கூடுதல் தகவல் தொடர்பு ஊடகத்தையும், பல இளைஞர்களுக்கு மத்தியில், அதிலும் அவர் களமாடியவிதம்தான்! அவரின் நாடகக் கணக்கு, 1944 இல், 'சாந்தா அல்லது பழனியப்பன்' நாடகத்திலிருந்து தொடங்குகிறது. தமிழ்நாடு தமிழ் மாணவர் மன்ற நிதிக்காகத் திருவாரூரில் அரங்கேறியது. அந்த நாடகத்தில்,

காங்கிரஸ் எதிர்ப்பாளர் சிவகுரு வேடத்தில் கலைஞர் தன் இருபத்திரண்டு வயதில் நடித்திருக்கிறார். பின் நச்சுக்கோப்பை என்ற பெயரில் அந்நாடகம் 1970 வரையும் நடந்திருக்கிறது. வாழ முடியாதவர்கள் (1945) நாடகத்தில் சிவாஜி கணேசன் முக்கிய வேடத்தில் நடித்திருந்தார். இந்நாடகத்தின் மூலம் திரட்டப்பட்ட நிதி சென்னையில் தி.மு.க. கட்சி அலுவலகத்திற்காக 'அறிவகம்' வாங்கக் கொடுக்கப்பட்டதாம். கலைஞர் எழுதிய தூக்குமேடை (1947) நாடகம், எம்.ஆர். இராதாவின் திராவிட மறுமலர்ச்சி நாடக சபைக்காக நிகழ்த்தப்பட்டது. அதில் திராவிடர் கழகக் கருஞ்சட்டைத் தொண்டராகப் பாண்டியன் என்ற கதாபாத்திரத்தில் கலைஞர் எம்.ஆர்.இராதாவுடன் நடித் திருந்தார். பரப்பிரும்மம் (1952) நாடகத்தில் கலைஞருடன் சிவாஜியும் நடித்திருந்தார். மணிமகுடம் (1956) நாடகத்தை இலட்சிய நடிகர் எஸ்.எஸ். ஆருக்காக எழுதிக் கொடுத்திருந்தார். கொள்கைப் பிரச்சார நாடகமாக உதயசூரியன் (1958) நாடகத்தைக் கலைஞர் எழுதியிருக்கிறார். இந்த நாடகம் வேலூர் கட்சி மாநாட்டில் நிகழ்ந்துகொண்டிருந்த போதுதான் தேர்தல் ஆணையம் 01-03-19 58 அன்று 'உதயசூரியன்' சின்னத்தைத் தி.மு. கழகத்திற்கு வழங்கிய செய்தி வந்துசேர்ந்ததாம். காகி தப் பூ (1966) நாடகம் மூலம் 1967 தேர்தல் நிதிக்காக மூன்று இலட்சம் ரூபாய்வரை நிதி திரட்டிக் கொடுத்திருக்கிறார். இவைபோக, நானே அறிவாளி, திருவாளர் தேசியம் பிள்ளை, சிலப்பதிகாரம் ஆகிய நாடகங்களைத் தன் அழகுத் தமிழில் படைத்திருக்கிறார். 'சேரமான் தம்பி இளங்கோ தந்த சிலப்பதிகாரத்தை, என் தம்பி கருணாநிதி இங்கு நாடகமாகத் தருவது பொருத்தமானதே' என்று அண்ணா அந்நாடகத்திற்கு அணிந்துரை வழங்கியிருப்பார். பொற்கொல்லனின் சூழ்ச்சி என்று சிலம்பில் இருந்ததை, அமைச்சர் செய்கிற சூழ்ச்சியாகக் கலைஞர் தன் நாடகத்தில் மாற்றியிருப்பார். அவசரநிலைக் காலக்கட்டத்தில் (1975-1977) காவல்துறையினர் கலைஞர் வீட்டைச் சோதனையிட்டபோது, 'முஜிபுர் ரஹ்மான்' என்ற முழுமை பெறாத நாடகக் கையெழுத்துப்படி ஒன்று அவர் வீட்டில் கிடைத்ததாகத் தெரிகிறது. எண்பதுகளின் தொடக்கத்தில், 'புனித ராஜ்யம்' எனும் நாடகத்தை, எந்தத் தெருமுனையிலும் கழகத் தோழர்கள் நிகழ்த்தும்படி அன்றாட அரசியலை வீதிக்குக் கொண்டுவரும் தொனியில், வீதிநாடகப் பாணியில் முரசொலியில் தொடர்ச்சியாக எழுதியிருந்தார் கலைஞர்! நான் மதுரையில் நிஜநாடக இயக்கம் எனும் அமைப்பைத் தொடங்கியிருந்த காலத்தில், எம்ஜிஆர் ஆட்சியின் அவலங்களைச் சொல்வதாக இருந்த அந்நாடக எழுத்துகளை வாசித்திருக்கிறேன். நாடகத்தைக் கருத்துப் பரப்புரைக்கு, இயக்கச் செயற்பாட்டிற்கு முழுமையாகப் பயன்படுத்திய அவரின் இயக்க உத்வேகம் நினைக்கப்பட வேண்டியது! தற்பொழுது, மாற்று ஊடக மையமும் இலயோலா மாணவர் அரவணைப்பு மையமும் இணைந்து பேரறிஞர் அண்ணாவின் 115 ஆவது பிறந்த தினத்திலிருந்து (15-09-2023), கலைஞர் நூற்றாண்டு பிறந்தநாள் (03-06-2024) நிறைவு வரையும், 'முத்தமிழறிஞர் கலைஞர் மு.கருணாநிதி அவர்களின் சிறுகதைகள் வீதி நாடகங்களாக' நிகழ்த்துதல் எனும் திட்டப்பணியை மேற்கொண்டு செயற்பட்டுவருவது மகிழ்ச்சி தரும் திராவிட இயக்க நாடகச் செயற்பாடுகளின் ஒரு தொடர்ச்சியே ஆகும்.

'நான் சினிமா உலகத்துக்கு மாறுபட்டவன்; எதிர்ப்பாளன். இப்படிப்பட்ட நான் இராதா பெயரில் மன்றம் நிறுவ ஆசைப்பட்டதன் காரணம்,

நான் எப்படிச் சமுதாயத் துறையில் மாறுதல் எண்ணமும் புரட்சிக் கருத்துகளும் கொண்டு பாடுபட்டு வருகின்றேனோ, அப்படியே இராதா அவர்களும் நமது கருத்துகளை நாடகத் துறையில் விடாப்பிடியாக நடத்திக்கொண்டு வருபவர் ஆவார். நாட்டில் உள்ள எல்லாக் கலைஞர்களும் ரசிகர்கள் பின்செல்லுபவர்கள்.அவர்கள் மனம் திருப்திப்படும்படி எல்லாம் நடந்துகொள்ள முற்படுவார்கள். நண்பர் இராதா அப்படிப்பட்ட கலைஞர் அல்ல. தான் ரசிகர் பின்செல்லாமல் ரசிகர் தன்பின் வரவேண்டும், தன் பேச்சைக் கேட்க வேண்டும் என்று விரும்புபவர். மக்கள் தன் கருத்தை ஏற்றுக்கொள்ள முற்பட்டாலும் முற்படாவிட்டாலும் தனது கருத்தை வலியுறுத்தி எடுத்துச் சொல்லத் தவறுவதே இல்லை' என்று 18-11-1962 அன்று சென்னை பெரியார் திடலில் நடிகவேள் இராதா மன்ற அடிக்கல் நாட்டு விழாவில் தலைமையேற்றுப் பெரியார் பேசியது! (மேலது, பக்.64). இது, நூற்றுக்கு நூறு உண்மையென்பது இராதாவின் வாழ்க்கையைப் புரட்டிப் பார்த்தால் எல்லாப் பக்கங்களும் இதையேதான் சொல்லும்! அண்ணா, கலைஞர் போலில்லாமல் இராதா முழுக்க முழுக்க பாய்ஸ் கம்பெனியின் வார்ப்பு! இராதா தன் சிறுவயதில் 'ஆலந்தூர் பாய்ஸ் கம்பெனி'யில் முதலில் போட்ட வேடம், 'கிருஷ்ண லீலா' நாடகத்தில் பாலகிருட்டிணன் வேடம்! அதன்பிறகு 'அரிச்சந்திரா'வில் லோகிதாசன் வேடம், 'நல்லதங்காள்' நாடகத்தில் ஏழு பிள்ளைகளில் ஒரு பிள்ளை என்று பல வேடங்களில் நடித்துத் தன்னை உரப்படுத்திக் கொண்டவர். கொஞ்ச காலம், சாமண்ணா அய்யர் கம்பெனி, அதன்பிறகு ஜெகந்நாதய்யர் கம்பெனி (1924 இல் தன் 12 ஆவது வயதில் 'கதரின் வெற்றி' நாடகத்தில் 'பாயாசம்' என்ற நகைச்சுவை வேடத்தில் நடித்திருக்கிறார்), மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனி, மதுரை பாலமீன ரஞ்சனி சபா, 'யதார்த்தம் பொன்னுசாமிப் பிள்ளை' நாடகக் குழுக்களில் உரமேற்றிப் பின் திராவிட இயக்கச் சிந்தனையில் தன்னை முழுவதுமாய்க் கரைத்துக் கொண்டிருந்த ஓர் அற்புதக் கலைஞர் எம்.ஆர்.இராதா!

நாற்பதுகளின் முற்பகுதியில் சேலத்தில் இராதாவின் 'இழந்த காதல்'நாடகத்தை அண்ணா பார்த்துவிட்டு, அதைப் பெரியாரிடம் சொல்லியிருக்கிறார். ஒருநாள் பெரியாரும் ஈவெகி சம்பத்தும், அண்ணாவும் 'இழந்த காதல்' நாடகம் பார்க்கப் போயிருந்திருக்கிறார்கள். இடைவேளையின்போது மூவரும் மேடையேறி, 'நாங்கள் நடத்துகிற நூறு கூட்டங்களும், இராதாவின் நாடகம் ஒன்றும் சரி' என்று பேசியிருக்கிறார்கள். அன்றுதான் அண்ணாவுக்கு இராதாவை கட்சி வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்ற எண்ணமும், தானும் நாடகம் எழுத வேண்டும் என்ற எண்ணமும் தோன்றியிருக்க வேண்டும் என்கிறார், 'பெரியாரின் போர்வாள் நடிகவேள் எம்.ஆர்.இராதா' நூலினுடைய ஆசிரியர் ச.சோமசுந்தரம் அவர்கள்! 'இழந்த காத'லுக்கு முன், இராதா, 'கள்வர் தலைவன்', 'பதிபக்தி', 'பம்பாய் மெயில்' ஆகிய நாடகங்களை நிகழ்த்தியுள்ள போதும் நாடகப் பயணத்தில் அவருக்குப் பெரும் புகழை ஈட்டித் தந்ததும், அண்ணா, பெரியாருடன், அவர்தம் கொள்கைகளில் அவர் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக்கொண்டதும், 'இழந்த காத'லை ஒட்டிய இந்தக் காலக்கட்டத்தில்தான்! அதைத் தொடர்ந்து 1944 ஆம் ஆண்டு முதல் தமிழ்நாட்டின் பட்டிதொட்டியெங்கும் பெரியாரின் பிரச்சாரப் பீரங்கியாகச் செயல்பட ஆரம்பித்தார் இராதா! 'விமலா அல்லது

விதவையின் கண்ணீர்', 'இலட்சுமி காந்தன்', 'இரத்தக் கண்ணீர்' ஆகிய புகழ்மிக்க நாடகங்களை நடத்திக் கொண்டிருக்கையில், இவற்றை விடவும் திராவிட இயக்கக் கொள்கைகளைப் புரட்சிகரமாக மக்களிடம் கொண்டு செல்லும் நாடகம் ஒன்றை நடத்த விரும்பினார். அந்தவகையில் 1946 இல் திராவிடர் கழகத்தைச் சேர்ந்த சி.பி. சின்னராஜு (பிற்பாடு சி.பி. சிற்றரசு ஆனார்) எழுதிய நாடகம்தான், 'போர்வாள்'! நாடகம் அரங்கேறும் முன்னரே பிரகாசம் தலைமையிலான தமிழ்நாடு அரசாங்கத்தால் இந்நாடகம் தடைசெய்யப்பட்டது. தடை செய்யப்பட்ட இந்த நாடகத்தை, 'சர்வாதிகாரி', 'மறைந்த மாவீரன் மலேயா கணபதி', 'மகாத்மா தொண்டன்', 'சுந்தரலீலா', 'நண்பன்' என்று பல பெயர்களில் மாறிமாறிப் போட்டிருக்கிறார் இராதா! இதேபோல் தடைசெய்திருந்த கலைஞரின் 'தூக்குமேடை' நாடகத்தையும் 'நல்ல முடிவு', 'நல்ல தீர்ப்பு', 'பேப்பர் நியூஸ்', 'காதல் பலி', 'காதலின் முடிவு', 'பணக்காரன்', 'பக்தன்' என்ற பெயர்களிலும், திருவாரூர் தங்கராசுவின் 'இரத்தக் கண்ணீர்' நாடகத்தை 'மேல்நாட்டுப் படிப்பு' என்கிற பெயரிலும் தடையை மீறித் தொடர்ந்து நிகழ்த்தி வந்தார் அவர்! (மேலது, பக்.65-66).

இந்த இடத்தில் நாடகத் தடைக்கு எதிராக எம்.ஆர்.இராதா அவர்கள் மேற்கொண்ட துணிவான சம்பவங்கள் இன்னுமே ருசிகரமானவை- பேசப்பட வேண்டியவை! தடைசெய்யப்பட்டிருந்த 'போர் வாள்' நாடகத்தைச் 'சுந்தரலீலா' (07-07-1953) என்ற பெயரிலும், அதுபோலவே 'தூக்குமேடை' நாடகத்தைப் 'பணக்காரன்' (09-09-1953 & 02-02-1954) என்ற பெயரிலும் சேலம் ஜில்லாவில் நடித்ததற்காக, சேலம் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில், இராதா மீது வழக்குத் தொடரப்பட்டு, அது நடந்து கொண்டிருந்தது. அத்தோடு, 28-08-54இல் 'வால்மீகி இராமாயணம்' என்ற பெயரில், அவர் நாடகம் நடத்துவதாயிருந்து இறுதி நேரத்தில் அரசாங்கமே அதற்கும் தடை விதித்துவிட்டது. இவ்வாறு தடை செய்வதே சட்ட விரோதம் என்றும் அந்தத் தடைச் சட்டமே, புது அரசியல் சட்டப்படிச் செல்லாது என்றும் எம்.ஆர். இராதா சென்னை உயர் நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்திருந்தார். 19-09-54 இல் இந்த வழக்குகளை ஆட்சியாளர்கள் திடீரெனத் திரும்பப் பெற்றுக்கொண்டார்கள். அதற்கு காரணங்கள் இருந்தன. நாடக நிகழ்த்தல்களை, பிரிட்டிஷ் அரசின் நிருவாகக் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவர, 1876 இல் பிரிட்டிஷ் அரசு கொண்டு வந்ததே, 'நாடக நிகழ்த்தல்கள் சட்ட'மாகும் (Dramatic Performances Act 1876-DPA). இதன்கீழ்தான் எம்.ஆர். இராதாவின் நாடகங்கள் தடை செய்யப்பட்டு, அவர்மீது வழக்குத் தொடரப்பட்டிருந்தது. 1950 இன் இந்திய அரசியல் சட்டம் பிரிவு 3இல் 19ஆவது ஷரத்து, எனக்குக் கருத்துச் சுதந்திரத்தை வழங்கியிருக்கையில், இந்தியக் குடியரசில் காலாவதியாகிவிட்ட பிரிட்டிஷாரின் 1876 இன் சட்டப்படி எப்படி என் நாடகங்களுக்குத் தடை விதிக்க முடியும் என்பதே அவரின் கேள்வி! அந்த அடிப்படையில் வழக்கைத் திரும்பப் பெறுவதாக அட்வகேட் ஜெனரல் தெரிவிக்க, சென்னை உயர் நீதிமன்ற நீதிபதிகள் திரு ராஜமன்னார், திரு இராஜகோபால் அய்யங்கார் ஆகியோர் அரசாங்கத்தின் மனுவைத் தள்ளுபடி செய்தனர். இது சட்டத்தைத் தன் சட்டைப்பையில் வைத்திருந்த சட்ட அமைச்சர் திரு சி.சுப்பிரமணியத்திற்கு அவமானமாயிருந்திருக்கிறது. இராதாவின்

நாடகங்களைத் தடை செய்தே தீரவேண்டும் என்னும் முடிவிலிருந்த மாநில அரசு 27-11-54 இல் புதிய நாடகச் சட்டமொன்றை விசேஷ கெஜட்டில் பிரசுரிக்கின்றனர். அதற்கான அடிப்படைக் காரணமாக அரசு சொல்லியிருந்தது, 1876 சட்டத்தில், பாதிக்கப்பட்ட கட்சிக்காரரர்கள் தங்கள் ஆட்சேபனைகளைத் தெரிவிக்கவோ அல்லது அப்பீல் செய்யவோ அதில் வாய்ப்பில்லை. ஆகவே 1876 சட்டத்தை மாற்றிவிட்டு, புதிய சட்டத்தை இயற்ற சர்க்கார் முடிவு செய்திருக்கின்றனர். அதற்காகக் கொண்டுவரும் இந்த மசோதா, 'சென்னை நாடக நிகழ்த்தல்கள் சட்டம்' (Chennai Dramatic Performance Act- CDPA) என்பதாக அழைக்கப்படும். இப்பொழுது புரிந்திருக்கும் இதுவரையுமான நம் தொடர் அனுபவங்களிலிருந்து, 'என்ன அழகான பொய் இது' என்று! ஓநாய்கள் ஆடுகளுக்காக நயந்து பேசுவது என்பது கதையில் மட்டுமில்லை; நிஜத்திலும் எல்லாக் காலங்களிலும் ஆள்பவர்களின் தந்திர நடவடிக்கையாகவே இருந்து வருகிறது. 1969இல் தமிழ்நாடு நாடக நிகழ்த்தல்கள் சட்டம்-1954 (TNDPA) என்பதாகப் பெயர் மாறியிருக்கிறது. இதுபற்றிய முழுமையான விவரணங்களுக்கு, '1954- ராதா நாடகத் தடையும் ராதா நாடகச் சட்டமும்'– மு.இராமசுவாமி, 2020; நியூ செஞ்சுரி புத்தக நிறுவனம் நூலில் காணலாம்.



எளிமையாகச் சொல்வதாயிருந்தால் அரசு தனக்கு வேண்டாததாய்க் கருதும் எந்த ஒரு நாடகத்தையும் அவர்கள் வகுத்து வைத்திருக்கிற விதிகளின் கீழ் கொண்டுவந்து, அந்த நாடகத்தின் 'ஜோலி'யை அப்போதே முடிக்கலாம். திராவிடர் கழகம், பகுத்தறிவு இயக்கங்கள் இதை எதிர்த்துப் போராடிய முழு வரலாறும் மேற்குறிப்பிடப்பட்டுள்ள நூலில் முழுமையாக விவாதிக்கப்பட்டுள்ளன. பெரியார் வெளிநாட்டுப் பயணத்திலிருந்தபோது நாடகக் கலையின் கருத்துச் சுதந்திரத்திற்காக, அன்றைய அரசை எதிர்த்துத் திராவிடர் கழகத் தோழர்கள், எம்.ஆர்.இராதாவின் கரம் பற்றிப் போராடிய வரலாறு, தமிழ் நாடக வரலாற்றில் குறிப்பிடப்பட வேண்டியது.

காவல்துறையின் தடை, எதிர்ப்பாளர்களின் கல்லெறி, கலவரம், தாக்குதல் இல்லாமல் அவரின் நாடகங்கள் பெரும்பாலும் நடந்ததில்லை. எதிர்ப்புகளுக்கிடையில்தான் அவருடைய நாடகங்கள் வெற்றி நடைபோட்டன. இதனால் பொருள் நட்டமும் காலவிரையமும் ஏற்பட்டாலும் அவற்றைத் துணிவோடு எதிர்கொண்டு திராவிட இயக்கக் கருத்துகள் இந்த மண்ணில் வேர்கொள்ள, பெரியாரின் உண்மை ஊழியனாய்ச் செயல்பட்டார் அவர் என்பது மிகையானதல்ல. இவ்வளவு சிக்கல்களுக்குமிடையே, திரைப்படங்களில் நடித்துக் கொண்டிருந்த

*வேளையிலும் 1944 முதல் 1964 வரையும் 20 ஆண்டுகளில், கணக்கிற்குத் தப்பியவை போக, இராதா நிகழ்த்திய நாடக நிகழ்த்தல்களின் எண்ணிக்கை 5641 ஆகும். வீழ்நாள் படாது நிகழ்த்தியிருந்தால், சற்றேறக்குறைய 15 முழுமையான ஆண்டுகள்! இது ஆச்சரியம் தருவதாகும். ஆயினும் உண்மை! திராவிட இயக்கத்தின் கருத்துப் பொதியான நாடக நிகழ்த்தல்களில் தன்னை முழுவதுமாய்க் கரைத்திருக்கிற எம்.ஆர்.இராதாதான் திராவிட இயக்க நாடக நிகழ்த்தல்களின் உச்ச அளவுமானியாகும் (மேலது, பக். 66-67).*

இதைத் தொடர்ந்து, திராவிட இயக்கச் சிந்தனைச்சுடர் தூக்கித் தங்கள் நாடகங்கள்வழி மக்களின் அறிவை ஆற்றுப்படுத்திய எண்ணற்றக் கலைஞர்கள் இங்குள்ளனர். அவர்களைப் பற்றி எல்லாம் தனித்தனியாக எழுதவேண்டிய பெரும்பணி எதிர்காலச் சமூகத்திற்கு அடையாளப்படுத்தவேண்டிய பெரும் கடன், தீராக்கடனாய் எனக்குள் இன்னமும் கிடக்கிறது. ஆயினும் ஆச்சரியப்பட்டு அண்ணாந்து நோக்கத்தகும் முக்கியமான நாடகத் தளகர்த்தர்கள் சிலரை இங்குத் தொட்டிருக்கிறேன் என்பதில் ஓரளவு நிறைவுகொள்ள முடிகிறது. காலம் வசதிசெய்து கொடுத்தால் அதையும் செய்து முடிக்கவேண்டும் – அது திராவிட இயக்கச் சிந்தனையை உண்மையாய் உயர்த்திப் பிடித்த நாடகத் தோழமைகளை நினைவில் கொள்வதற்கும் தமிழ் நாடகத்தின் ஒரு கட்டப் போராட்ட வாழ்க்கையைப் பதிவு செய்வதற்கும் உதவி செய்ததாகும். தமிழ் நாடகப் பெருங்கணக்கில் கடந்த 50 ஆண்டுகளில் கரையானுக்குக் காவு கொடுத்திருக்கிற திராவிட இயக்க நாடக மரபின் சிதைந்த பக்கங்களை மறுபடியும் புதிதாய் எழுதவேண்டிய பெரும்பணி திராவிட இயக்க நாடகச் சிந்தனையாளர்களுக்கு இருக்கிறது. திராவிட இயக்கச் சிந்தனைத் தளத்தில் நாடகங்களை விதைத்த, பகுத்தறிவு நாடகக் குழுக்கள் எதனால் இங்குச் செயல்பட முடியாமல் போயின? தன்முனைப்பு (ego), பொருளாதாரம், சிற்றின்பம், கௌரவக் குறைச்சல் (கூத்தாடிக் கலைஞராகப் பார்க்கப்பட்டபோதும்!), போட்டி, பொறாமை இவையெல்லாம் கூட சிறுசிறு காரணங்களாயிருந்திருக்கலாம். தனிப்பட்ட குழுவினருக்கு இது நிகழலாம். ஆனால் கொள்கைப் பிடிப்புள்ள, கட்டுதிட்டான, அமைப்பே கட்டியெழுப்பியிருந்த நாடகக் குழுவிற்கும்கூடவா? அமைப்பில் ஏற்படுகின்ற விரிசல், அதிகாரத்தை அடைவதில் ஏற்படுகின்ற ஈர்ப்பு, அமைப்பின் தேக்கம் இவையெல்லாம்கூட சிலவேளைகளில் காரணங்களாய் அமைவதுண்டு. ஆயின் அதிகாரப் பீடங்களுக்கு ஆசைப்படாமல், தான் ஏற்றுக்கொண்ட கருத்தியல் உண்மைக் கவசத்துடன் சமூக மேம்பாட்டிற்கான பரப்புரையை மட்டுமே தன் இலட்சியமாய்க் கொண்டிலங்கும் திராவிட இயக்க அமைப்புகளில் கூட ஏனிந்த சுணக்கம்? ஏனிந்த நீண்ட இடைவெளி? எதிர்ப்பார்ப்புகள் அதிகமாய்ப் போனதால் இருக்குமா? நடுவுக்குப் பின்னுள்ள பக்கங்கள் காணாமல் போனதற்கு என்ன காரணம்? தொடர்ச்சி இருந்தால்தான் அது மரபு! அறுந்துபோனால் அது வெறும் சருகு! தீவிரமாகச் சிந்திக்கவேண்டிய நேரம் இது! அந்தவகையில், நினைத்து அசைபோடத் தகும் என் சொந்த அனுபவங்களில் சிலவற்றை இத்துடன் இணைத்துப் பார்க்கலாம் என்று தோன்றுகிறது.

(தேடல் தொடரும்)



சிறுகதை

நலங்கிள்ளி

# ஞாபகங்கள்



இருப்பதே முப்பது, நாப்பது வூடு. இத... கிழக்கு தெரு, மேற்கு தெருன்னு எதுக்கு பிரிச்சி வச்சானுங்க... கெழக்கு தெருவுல மட்டும் படிச்சவங்க, பணம் அதிகம் வச்சியிருக்கவங்க, நெலம் அதிகம் உள்ளவங்க யாராவது இருந்தா சரின்னு ஒத்துக்கிடலாம். அப்படியில்லாம ரெண்டு தெருவுலேயும் ஒரே மாதிரியான சவுகரியமும், அசவுகரியமும் இருக்குறப்ப... எதுக்கு இந்த பிரிவு.

ஒத்தையடி பாதையா... மொதல்ல அரசபுரம் இருந்தது. ரொம்ப வருஷத்துக்கு அப்புறமா செம்மண் ரோடு போட்டாங்க... கவுன்சிலர் கிட்டேயும், கலெக்டர்கிட்டேயும் மனு எழுதி கொடுத்து பத்து வருஷம் கழிச்சியே தாரு ரோடு வந்தது. இதுல தான் இந்த வாண்டுங்க சர்ரு,புர்ருன்னு வெரசா போய்ட்டு வரானுங்க...

மழ பேஞ்சி ஓஞ்ச இரண்டாவது நாள்ல இந்த ஊரு கேரளத்து மாநிலம் போல செழிப்பா ஜிவ்வுன்னு மனச கொஞ்சலா ஒரு பிராண்டு பிராண்டிட்டு போகும். கோட காலத்துல செருப்பு இல்லாம கால தரையில வெச்சா உள்ளங்காலு சத பிச்சிக்கிட்டு வந்திடும்.

தையதையன்னு சிவநேசன் ஓட்ட டவுசர மாட்டிக்கிட்டு மூக்கு ஒழுக பள்ளிக்கூடம் போவான். "சத்துணவு சோறு திங்க எதுக்குடா இந்த பீத்து பீத்திக்கிட்டு போற"ன்னு லெட்சுமி அக்கா அவன நோண்டும் போது மானரோசம் இல்லாம சிரிச்சிக்கிட்டே போவான். ஊர்ல உள்ள எல்லார பத்தியும் பேசுறதுக்கு குறைந்தபட்சம் ஒரு மணி நேரத்திற்கான சேதிய வச்சுக்கிட்டு திரியும் லெட்சுமி அக்கா.

தன்னந்தனியா பனை மரத்துக்கிட்ட நின்னு அப்பப்ப சிகரெட் புடிக்கும் பஞ்சநாதன்கூட சேராதன்னு சொன்ன ராசு தாத்தா நைட்டுக்குள்ள அர கிளாசு சாராயத்தயாவது குடிக்காம தூங்க மாட்டாரு

எங்க வீட்டுல சுடுசோறும், தயிரும், வடுமாங்காவும் கெடச்சிடும். கறவ மாடு இருந்ததால பாலு, தயிருக்கு பஞ்சமில்லாம இருந்தோம். ஆச... ஆசையா எனக்கு புடிக்குமுன்னு நெத்திலி கருவாட்டு கொழம்பு வச்சு கொடுத்த அப்பத்தா உடம்புக்கு ஆகாரம் செல்லாம கெடந்தப்ப வருத்தப்பட்டு குந்திக்கிட்டு அழுதது நான் தான்.

காசு இல்லாத நேரத்துல முருங்க கீர ஒடிச்சி வதக்கி கஞ்சிக்கு தொட்டுக்க செஞ்சி தந்த அம்மா ஒரு நாளும் என்ன பட்டினி போட்டதில்ல.

'காட்டு நரிய உண்டி வில்லால அடிச்சேன், நல்ல பாம்ப கையில புடிச்சேன்' வெறும் கையால மொழம் போடும் செல்லதுரை நாக்க அடக்காம மூனு கிலோமீட்டர் நடந்து மைதீன் கடைக்கு வந்து உளுந்த வடை வாங்கி திங்கிறத வாடிக்கையா வச்சிருந்தார்.

வாத்திங்களோட சிநேகிதமோ பகையோ வச்சிக்காத பாண்டியனுக்கு பள்ளிக்கூட பீதிய போக்குனது சாந்தி. அவ இல்லாட்டி, பத்தாவது முடிச்சவன்டான்னு அலட்டிக்கிறானே அந்த அலட்டலெல்லாம் நடந்திருக்காது. இங்கிலிஷ் படிக்க வராத பாண்டியன் தமிழையும், அறிவியலையும் ஆர்வமாக படிச்சான். இப்ப 'டிராக்டர்' ஓட்டிக்கிட்டு இருக்குறதா சொல்றாங்க. கருவேல மரத்து பிசின் எடுத்து கிழிஞ்சி போன நோட்டு புக்க ஒட்டிக்கொடுப்பான். சோறு வடிச்சி கெடைக்கிற கஞ்சி தண்ணியில நைட்டே முழு பென்சில சீவி தூள் தூளா போட்டு மூடி வச்சி காத்தால தொறந்தா. அது கட்டியாகி ரப்பரா மாறி இருக்குமுன்னு எங்கள நம்ப வச்சதும் அவன்தான்!

பாட்டு பாடி வயல் நடவு நடக்கும். செவ்வக வடிவத்துல இருக்குற சில வயல்களில் நாத்து காத்துல அசையிறது கண்ணுக்கு குளிர்ச்சியா இருக்கும். கால சேத்துல வச்சி மிதிச்சி வந்த சேத்து புண்ணுக்கு எண்ணெய் தடவி அடுத்த நாள் நடவு நடபோற சில பொம்பளைங்க டீக்கும், பொட்டலத்துக்கும், இருபத்தி அஞ்சி ரூபாய் காசுக்கும் முதுகு வலிக்க உழைப்பாங்க. கணவனை இழந்த சௌந்தர்யா அண்ணி கள எடுக்க, பருத்தி பஞ்சு எடுக்க, நாத்து நட, கரும்பு வெட்ட, சோளம் வெதைக்க இப்படி எந்த வேலைக்கு ஆள் வேணும்னு கூப்பிட்டாலும் மொத ஆளா ஓடி போயிடுவாங்க

சோமு வாத்தியாரு கிரேஸ் டீச்சர்கிட்ட தனியா நெறையா பேசிக்கிட்டு இருந்தத... கல்யாண சுந்தரம் அடிக்கடி பாத்துட்டு வந்து சொன்னான். இந்த விஷயங்களை பற்றி பேசும்போது அவனுக்கு அதிலே பேரின்பம் இருக்குமென்று கருதுகிறேன். அவனுக்கு வேல இருக்குற நேரத்திலும், வேல இல்லாத நேரத்திலும் ஆடு அச போடுறா... மாதிரி எங்கிட்ட இந்த செய்திய சொல்லிக்கிட்டேயிருப்பான்.

வீட்டுக்கு பின்னாடியிருக்குற குப்ப மேட்டிலிருந்து எருவு அள்ளி மாட்டு வண்டியில ஏத்தி தன் சொந்த வயலுக்கு இயற்கை உரத்த பயன்படுத்துற கண்ணப்பன் வருஷா. வருஷம் நல்ல மகசூல தேத்துவாரு. தாராசுரம் உழவர் சந்தைக்கு அவரு வயல்களிலிருந்து வெளஞ்சி வர்ற கொத்தவரங்கா, வெண்டக்கா, கத்தரிக்கா, தக்காளி, மௌகாவுக்கு நல்ல வரவேற்பு இருக்கும். விவசாயத்த ஒழுங்கா செஞ்சி கண்ணியமா குடும்பம் நடத்துகிற கண்ணப்பன் பொண்டாட்டி வட்டமுகமா, இளஞ்சிவப்பா அளவுக்கு அதிகமா அழகா இருப்பா... சண்டனு வந்துட்டா... இன்னாருன்னு நெனைக்கமாட்டா வாயிக்கு வந்ததெல்லாம் பேசுவா. அப்பொழுது 'ஆண்கள், பெண்கள் உடல்களின் மிகவும் முக்கியமான பாகங்கெல்லாம் ஏன் கெட்ட வார்த்தைகளாயின என்கிற கேள்வி எனக்குள் எழும்'.

மரம் வெட்டுறத் தொழில நம்பி வாழ்ந்த முனுசாமி கச்சிதமா வேலய முடிச்சி கொடுப்பாரு. எங்க வீட்ட கொஞ்சம் பின்னாடி இழுத்துக்கட்ட முடிவு எடுத்தப்ப அதுக்கு எடஞ்சலா இருந்த மூனு தென்ன மரத்தையும், ஒரு புளிய மரத்தையும் வெட்டினவது முனுசாமி. தென்னமரத்திலிருந்த தூக்கணாங்குருவி

கூடு, தேங்கா, கீத்து, இளநீர், புளியமரத்திலிருந்த செங்காய்கள், பூக்கள், புளியம்பழம் இதையெல்லாம் இழந்தோம். அந்த நேரத்துல மனசு ரொம்ப சங்கடப்பட்டு தவியா தவிச்சது. நான் எதுவும் கேள்வி கேட்க முடியாம அழுவாத கொறையா கெடந்தேன். முனுசாமிக்கு ஏழு புள்ளைங்க அதுல ஒருத்தன் ஊமையன். ஊமையன பாத்து மூக்க சொறிஞ்சா அவனுக்கு கோபம் கோபமா வந்து அடிக்க வந்திடுவான். ரெண்டு புள்ளைக்கு அப்பாவான அவன வெறுப்பேத்த இப்ப இருக்குற பொடிப்பயலுங்க கூட மூக்க சொறியிறானுங்க ஊமையனும் அவனுங்கள... அடிக்க ஓடிக்கிட்டு இருக்கான்.

வீரமணி சார் எங்க குடும்பத்துல ஒருத்தவரா இருந்தவரு. அண்ணன் காலேஜ் படிச்சி பேராசிரியரானதிலிருந்து, என்னோட பள்ளிப் படிப்பு வரைக்கும் படிப்பு சம்மந்தமான எல்லா கேள்விக்கும் பதிலாக இருந்தாரு. நான் எட்டாவது படிக்கிறப்ப மகாத்மா காந்தி பத்தியான பேச்சி போட்டியில என்ன பேச சொல்லிடாரு. பத்தாவது, பன்னிரண்டாவது மாணவர்கள் முன்னாடி நான் எப்படி பயப்படாம பேசுறதுன்னு தெரியாம... பேச்சு போட்டி நடந்த அன்னைக்கு லீவு போட்டுட்டேன். அத... இன்னைக்கு வரைக்கும் சொல்லிக்காட்டி சிரிப்பாரு. நல்லா புரியும்படி நிதானமா பாடம் நடத்துவாரு.

பள்ளிக்கூட மெயின் ரோட்டுல உயரமா அழுக்கு துணியோட எங்கிருந்தோ மனநிலை பாதிக்கப்பட்ட ஒருத்தன் வந்திருந்தான். அவன் ரோட்டுல போற, வரவங்கள பயமூட்டி, வம்பு வளத்து நெருங்க போவான். அவுங்க நடுக்கத்தோடு ஓடுவாங்க... தினசரி இத... கேள்விப்பட்டு கொந்தளித்த வாலிபர்கள் அவன அடிச்சி வெரட்ட போனாங்க. அவனோ. இவனுங்கள கல்லால அடிச்சி வெரட்டிட்டான். சாமர்த்தியமா அந்த எடத்தவிட்டு நகராமலிருந்த அவன பத்தி போலீஸ் ஸ்டேஷன்ல சொன்னாங்க... காவலர்கள் இரண்டு நாள் கழிச்சி வந்து அவன்கிட்ட பேச்சு கொடுத்தப்ப பதிலுக்கு அவன் புரியாத பாசை பேசினான். அவன புடிச்சி தலமுடி வெட்டி, குளிக்க வச்சி மனநல காப்பகத்துக்கு அனுப்பிவிட்டதாக எங்க ஊரு எஸ்.ஐ சேகரு சொன்னார்.

அணைக்கர பாலம் பிரிட்டிஷ்காரங்க கட்டுனது. பாலத்த கட்டுறப்ப பாலு, சுண்ணாம்பு, முட்ட கலந்து கட்டினதா சொல்லுவாங்க. பாலத்துக்கு கீழ... தண்ணியில முதலைங்க தெப்பக்கட்ட மாதிரி கெடக்கும். கல்லெடுத்து அடிச்சா சிணுங்கிட்டு ஓடும். கோட காலத்துல வெறும் மணலா இருக்குற ஆத்துல அங்கங்க தண்ணி தேங்கியிருக்கும். அதுல சில முதலைங்க கெடக்கும். அப்ப ரொம்ப கிட்டத்துல முதலைய பாக்கலாம். பாலத்துக்கு பக்கத்துல மூலிகைப் பூங்காயிருக்கும். சிலரங்கே காதல் வயப்பட்டு இருந்ததையும் காண முடிந்திருக்கிறது.

ஒவ்வொரு வீட்டிலேயும் பணம் வசூலித்து பல திட்டங்கள் வகுத்து கோவில் திருவிழா நாள் குறித்தார்கள். அந்த நாட்களில் ரேடியோவில் பக்திப் பாடல்கள் கேட்கும். திருவிழா அன்று இளந்தாரிகள் கூட்டம், கூட்டமாக தெருவிற்குள் அலைந்து கொண்டிருப்பார்கள். சாமிக்கான அலங்காரம் முறைப்படி நடக்கும். உடலில் அலகு குத்திக்கொண்டு காவடி எடுப்பார்கள். ‘சில பெண்களின் மீதான கருத்துகளை நம்மிடம் போதித்த குருமார்களின் எண்ணம் தவிடு பொடியாகிடும்படி முழு பக்தியில் மூழ்கி கடந்து சென்ற மகளிரை வணங்கவே தோன்றியது’. தேங்காய், வாழைப்பழம், பூ, ஊதுவத்தி, கற்பூரம், எலுமிச்சைப்பழம், குங்குமம், வெற்றிலை, பாக்கு இவற்றை தட்டில் வைத்து அர்ச்சனைக்காகக்

காத்திருப்பார்கள். ஒவ்வொரு வீடாக ஆசி வழங்கி வந்துக்கொண்டிருந்தது அம்மன். தெருவெங்கும் மஞ்சள் தண்ணி சாயமும் வேப்பிலை சிதறல்களும் கிடந்தன. இரவு பத்தரை மணிக்கு மேல் நிகழ்ந்த கரகாட்டத்தைக் காண அதிக அளவிலான நபர்கள் வந்திருந்தார்கள். ஒப்பனைகளை நிரப்பிய கரகாட்டக்காரிகளின் அழகு மெய் சிலிர்க்க வைக்கும். அவர்களின் பொதுவெளி உரையாடல்கள் ஆபாச வார்த்தைகளால் அலங்கரித்திருந்தது. ரசிகர்களின் கைதட்டலுக்கும் கூச்சலுக்கும் ஏற்ப ஆட்டத்தைக் கூட்டும் அவர்களின் உள்ளம் களிப்புடன் இருக்குமா? என்பது சந்தேகம். அதிர்வூட்டும் தோற்றத்தில், பாவனையில் கிறங்கடிக்கச் செய்யும் அவர்களின் அசைவுகள் நம்மை மறக்கச் செய்துவிடும். கரகாட்டக்காரியோடு சேர்ந்து ஆடி கூட்டத்தை விசிலடிக்க வைத்த சக்திவேலுவை வீட்டுல சேக்காம கதவ சாத்தி “அந்த கரகாட்டக்காரியோடயே ஓடிப்போயிடு... இந்த பக்கம் வந்திடாத” என்று கோபத்தில் குதறிய சக்திவேலுவின் மனைவி ராஜவள்ளிக்கும் மளிகைக்கட மாணிக்கத்துக்கும் தொடர்பு உண்டு என்பதனை மறுக்க முடியாது.

பதிமூன்று வருடம் அரசபுரத்தை பிரிந்து அயல்நாட்டில் வசித்து அங்கிருந்து துரத்தப்பட்டு இன்று என் சொந்த ஊருக்கு வந்திருக்கும் போது எத்தனையோ ஞாபகங்கள் கண் முன்னே வந்து மோதி ஒரு திரைப்படம் போல ஓடிக்கொண்டிருக்கிறது.

nalangilli7@gmail.com ■



கவிதை

ப்ரதிபா ஜெயச்சந்திரன்

# இழந்தது போல் இழக்காமல் இருந்தது பற்றி

அது சாகசக் காடு
நிலவை ஏறிட்டுப் பார்க்காமலேயே
அதன் ஒளியின் ரசிப்பில்
மயங்கும் புள்ளிமான்கள்
கால்களுக்குக் கீழ்
மானின் குளம்படிகள்
காடுகளின் பெருமூச்சுகளில்,
சுவாச நாளங்கள் உறுதிப்பட்டன.
மேய்ச்சல் நிலமின்றித் துரத்தியடிக்கப்பட்ட
தேடுதல் கணங்களின் ஒரு புள்ளியில்
பசுமை வெளி ஒன்று
கையளிக்கப்பட்டதாக நினைத்து
பசிய புற்களின் வாசனையில்
சுயம் கரைந்து
கிடைக்காதது கிடைத்த மகிழ்வில்
மேய்ச்சலை மறந்து
பசுமையின் சுவீகரிப்பின் லயிப்பில்
நினைவுகளில் காலத் தீண்டல்
பேரதிர்வில்
உணர்வெல்லைகளுக்குள் தள்ளப்பட்டபோது
காலைகளுக்குக் கீழ் மானின் குளம்படிகள்
யாருமற்ற வெளியில்

ptrraj2603@gmail.com ■



கவிதை

தசாமி

# தேதிகளற்ற செம்புள்ளிகள்

குண்டு வெடிப்புகளின்
அதிர்வில்
மேசையின் மையத்திலிருந்த
பூமிப்பந்து நழுவி விழ
செங்கடலைத் தவிர மற்றவைகள்
பெயர்மாற்றிக் கொண்டன.
போருக்கெதிரான குரல்களை
ஒலித்த நாடுகளுக்கு மட்டுமே
பற்றி எழ
மேசையின் கைப்பிடி எட்டியது
வேடிக்கை பார்த்த நாடுகளின் முதுகை
ஒடிந்து கிடக்கும்
நம்பிகைகளால்
தூக்கி நிறுத்த முடியவில்லை
போருக்கு ஆதரவளித்த நாடுகளின்
இதயத்தில்
தேதிகளற்ற செம்புள்ளிக் கட்டங்கள்
துடித்துக் கொண்டிருக்கிறது
போருக்குள்ளான நாடுகளோ
பூமிப் பந்தின் தோற்றுவாயான
நெருப்புக் கோளத்தை
கண்களில் தேக்கியபடி
மல்லாந்து கிடக்கின்றன.

dhasamingv@gmail.com ■

கவிதை

ஸ்ரீநிவாஸ் பிரபு

# வடிவம் கொள்ளும் வாழ்வு

ஒத்திசைவுடனும்
ஒருங்கிணைவுடனும் செயல்படாது
மேய்ச்சல் நிலமாக
விரிந்திருக்கிறது மனம்.
மண்ணில் வீழ்ந்திருக்கும் கற்சிலைகளை
கவ்விச் சூழும் மரவேர்களாய்
ஒழுங்கின்மைக்குள்ளிருந்து ஒழுங்குடன்
ஓடுகிறது பாய்ச்சல்.
இயக்கு விசையில்.
வடிவத்தை மறைத்து
வெளிப்பட்டு மீள்கிறது மற்றொரு வடிவம்.
கூர்மைகளின் ஒருங்கிணைப்பில்
துளிர்த்தெழுகிறது மலர்க்காம்பு
அதிர்வுற்று உடையும் நீர்க்குமிழி போல்
கலைந்து கலைந்து
வண்ணங்களாய் விரிகிறது
வாழ்க்கை.

srinivasprabur@gmail.com ■



கட்டுரை

ஸ்ரீவில்லிபுத்தூர் எஸ். ரமேஷ்

# நாடகம் போட்டோம் ; அதாவது கோமாளிக்கூத்து அடித்தோம்...

“வீடு கட்டிப்பார்.
கல்யாணம் பண்ணிப்பார்.
நாடகம் போட்டுப்பார்.”

**இயக்குனரின் சந்திப்பு படலம் :**

“சார் சினி பீல்டு எனக்கு சரிப்பட்டு வரல. அதுல நான் தோத்துட்டேன். ஆனாலும், தொடர்ந்து இடைவிடாம முயற்சி பண்ணிக்கிட்டுத்தான் இருக்கேன். அதனால இப்போதைக்கு நான் நாடகம் போடலாமான்னு பாக்குறேன்” என்றார் என் எதிரே இருந்த பெரிய மர நாற்காலியில் அமர்ந்திருந்த இயக்குனர் தாமரைக்கண்ணன்

“சரி. உங்க விருப்பப்படி செய்யுங்க என்றேன்.”

அவர் என் முகத்தை நோக்கி, என் கண்களை உற்று நோக்கியபோது, அவரது கண்ணின் மணிகளில் நல்ல பிரகாசமான ஒளி வீசுவதைக் கண்டேன். ‘சரி , இவர் சினிமா டேரக்டருல்லா! அது அப்படித்தான் இருக்கும்’ னு நினைச்சுக்கிட்டேன். நாங்கள் அமர்ந்திருந்த அறையில் எங்கள் தலைக்கு மேலே 100 வாட்ஸ் பல்பு ஒளி விட்டுக்கொண்டிருந்தது.

“சரி செய்யுங்க.... ஆமா நாடகம் தயார் பண்ணிட்டீங்களா?” என்றேன்.

“தயார் பண்ணிக்கிட்டே இருக்கேன். கிட்டத்தட்ட பாதி நாடகம் வரை எழுதி முடிச்சுட்டேன். இன்னும் பாதி பாக்கி இருக்கு.”

“அரை குறையா ஸ்க்ரிப்ட் தயார் பண்ணிட்டீங்களா?”

“ஆமா சார்! தினசரி நைட்டுல உக்காந்து நாலு மணிநேரமாவது எழுதுறேன். இன்னும் முடிஞ்ச பாடில்லை. தினசரி ரெண்டு ஸீன் தான் எழுத முடியுது. அதுக்கு மேல என்னால எழுத முடியல. தலைவலி வந்துருது” என்றார் தாமரைக்கண்ணன்.

“சரி முடிச்சுட்டு வாங்க!” என்றேன்.

“சார், இந்த நாடகம் நடத்துறதுக்கு நீங்க தான் ஒத்துழைப்பு தரணும். இதுல உங்க வேலை நிறைய இருக்கு.”





“நான் என்ன பண்ணனும்?”

“சார், நீங்க நாடகத்துக்கு அஸோசியேட்டா ஒர்க் பண்ணனும்,” என்றார் இயக்குனர்.

உருப்படியாக நாடகத்தை நடத்தும் எண்ணம் அவருக்கு இல்லை போலும் என்று நினைத்துக் கொண்டேன் நான்.

“இல்ல சார்! நீங்க வந்துருங்க...! நீங்க இருந்தா எனக்கு பெரிய யானை பலம். இந்த நாடகம் தயாரிக்கறதுல நீங்க கூடவே இருக்கணும்,” என்றார் தாமரைக்கண்ணன்.

“அதனால என்ன? கூடவே இருக்கேன் சார்! உங்க அத்திகுளத்துல ரொம்ப காலத்துக்கு முன்னாடி ஒரு நாடகத்துக்கு வந்து, நான் வேலை செஞ்சு கொடுத்தேன்ல? அந்த நாடகத்துக்கு பேர் என்ன? தலைப்பு மறந்து போச்சு..!”

“பொற்கோவில்” .

“தலைப்பை மறக்காம வெச்சுருக்கீங்க சார்! வெரிகுட்!” என்று அவருக்கு நற்சான்றிதழ் தந்தேன். தாமரைக்கண்ணன் இருக்கையில் நெளிந்தார்.

“உங்களுக்கு அது பத்தின ஞாபகம் இருக்கா சார்?”

“ஏதோ கொஞ்சம் ஞாபகம் இருக்கு!”

என் நினைவின் அடுக்குகளில் இருந்து அந்த பழைய நாடக இயக்கs சம்பவங்களை மீள நினைவுபடுத்திக் கொள்ள முயன்றேன். அது 1996 -ம் ஆண்டு என்று நினைக்கிறேன். சட்டக் கல்லூரியின் தேர்வுகளுக்கு தீவிரமாகப் படித்துக்கொண்டிருக்கிறேன். தாமரைக்கண்ணன் தன்னுடைய நாடக இயக்கத்துக்கு, கூடஇருந்து துணை இருக்க முடியுமா என்று கேட்டார். நான் ஒப்புக் கொண்டேன்.

தாமரைக்கண்ணனைப் பற்றி நான் உங்களுக்கு சொல்லியே ஆக வேண்டும். அவர் பிறந்தது 1968-ம் ஆண்டு என்று அவரே எனக்குச் சொன்னார். ஜாதகப்படி சிம்ம ராசி. மிகவும் முன்கோபக்காரராய் இருப்பார் என்று ஆலமரத்தடி ஜோசியர் அவருக்கு சொல்லியிருந்தாராம். ஆறடி உயரம். ஒல்லியான சரீரம். சூம்பிய முகம். எங்க அண்ணன் ஷேக்ஸ்பியர் சித்தரிக்கும் ஒதேல்லோவின் கருப்பு நிற மேனி. அழியாத காவியமாகி விட்ட நாடக நாயகன் ஒதேல்லோவின் கருமை நிறத் தோலைப் பற்றி சொல்ல வந்த நாடக விமர்சகன் ஒருவன் சொல்கிறான் “அவனது உடம்பில் ஒரு கரித்துண்டை வைத்துக் கோடு போட்டால் அது தெரியாத அளவுக்கு அவன் கருப்பாக இருந்தான்”என்று. He was so black that a charcoal cannot make a mark on his body. அந்த அளவுக்கு கருப்பு. தலைமுடியை பின்புறமாக இழுத்து வாரியிருக்கும் 'கருப்பு' கேசம். அந்தக் ‘கருப்பு’ பத்து ரூபாய்க்கு கடையில் விற்கும் கருப்புச் சாயத்தை தலையில் தடவிக்கொள்வதால் வருவது. பேசுகிற போது யோசித்து யோசித்துத்தான் பேசுவார். வெளியே நண்பர்களைச் சந்திக்கச் செல்லும் போது அதற்கென்று தனியான சலவை செய்யப்பட்ட வெள்ளை நிற உடைகளை வைத்திருந்தார். காலில் வெள்ளை நிற பிளாஸ்டிக் செருப்பு அணிவார். ஒரு சினிமாக்காரனுக்கான சகலவித கல்யாண குணங்களெல்லாம் அவரிடம் நிறைந்தே இருந்தது.

பத்தாம் வகுப்பு வரை படித்திருப்பதாக அவரே சொல்லிக்கொண்டார். அவர் கற்ற கல்வி அவரை பழைய சைக்கிளைப் பழுது பார்க்கும் கடையில் கொண்டு வந்து உக்கார வைத்தது. இருபதாண்டுகள் கடுமையாக உழைத்து, சைக்கிளுக்கு பஞ்சர் ஒட்டி, பெடலை கழட்டி, புது டயர் மாற்றி, பூட்டுக்களை திறக்க வைத்த அனுபவத்தை வைத்து, அவரே சொந்தமாக சைக்கிள் செப்பனிடும் ஸ்தாபனத்தைத் திறந்து ஒரு 'தொழிலதிபராகி' விட்டார். அவருக்கு வேளா வேளைக்கு சாப்பாடு கூட முக்கியமில்லை ஆனால் சினிமா

சம்பந்தப்பட்ட பேச்சு ஒன்றே போதும். மணிக்கணக்கில், தான் திரைப்படம் இயக்க இருப்பதைக் குறித்துப் பேசுவார். இது எனக்கு சுவாரசியமான பொழுதுபோக்கு. என் வீட்டுக்கு அடிக்கடி வந்து திரைப்பட இயக்கம் குறித்து விவாதிப்பார். ஒருசில காட்சிகளில், கதாநாயகி தான் வேலை பார்க்கும் அலுவலகத்தில் பேசும் ஆங்கில வசனங்கள் எவ்வாறு இருக்க வேண்டுமென்று கேட்பார். நான் சில காகிதங்களில் அந்தக் காட்சியை ஷாட் ஷாட்டாக எழுதித் தருவேன். வாங்கி அதைத் தனது ஃபைலுக்குள் வைத்துக்கொள்வார். அவருக்கும் எனக்கும் நீண்ட நட்பு உண்டு. இந்த நட்புதான் என்னை இத்தனை ஆண்டுகளுக்குப் பின்பு நாடகம் இயக்க கூப்பிட்டிருக்கிறது.

**நாடக இயக்கம் செய்த படலம் :**

நாடக இயக்கம் என்றால் என்னவென்று கூட எனக்குத் தெரியாது. பள்ளிக்கூட நாட்களில் பல முறை நாடக மேடை ஏறியிருக்கிறேன். "ஜூலியஸ் சீசர்" நாடகத்தில், ரோமானிய பிரஜை வேடமிட்டு ஆங்கில வசனம் பேசியிருக்கிறேன். தமிழ் நாடகத்தில் கணக்குப்பிள்ளை வேடம் போட்டிருக்கிறேன். ஆங்கில ஆசிரியர் கிருஷ்ணசாமிதான் என்னுடைய சூத்திரதாரி. அவர் என்னை ஆட்டுவித்திருக்கிறார். நானும் ஆடியிருக்கிறேன்.

என்னை நாற்காலியில் உட்கார வைத்து, ரோஸ் பவுடரை கையில் குழைத்துக்கொண்டு, என் முகம் முழுக்க அப்பி விட்டது தட்டச்சு ஆசிரியர் தாமஸ் ஹென்றி. முகத்தில் அரிதாரம் பூசப்படும் போது அந்த நேரம் எனக்கு ஒருவிதமான சிலிர்ப்பு வரும். நான் ஒரு மகா நடிகன் என்று என்னைக் குறித்து கற்பனை செய்து கொள்ளுவேன்.

1996 -ம் ஆண்டு, அத்திகுளத்தில் நாங்கள் போட்ட நாடகத்தை என்னால் மறக்க இயலாது. அத்திகுளம் கிராமம் என்பது எங்கள் ஊருக்கு வெளியே, கிழக்குத் திசையில் ஆறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. பெரும்பாலும் அன்றாடம் கூலி வேலைக்குப் போகும் மக்கள், சிறு தொழில் செய்யும் வணிகர்கள், விவசாயக் கூலிகள் நிறைந்திருக்கும் சிறு ஊர். அங்குள்ள பிள்ளையார் கோவிலில்தான் எங்கள் நாடகத்தின் ஒத்திகை நடந்தது. வந்திருந்த நடிகர்கள் எல்லாருமே நடிகர்களுக்கான முகவெட்டு எதுவும் இல்லாமல், முகம் முழுக்க வெட்டுக்கள் விழுந்த முகங்கள் கொண்டவர்களாய் இருந்தார்கள். அநேகமாக எல்லோரும் லுங்கிதான் அணிந்திருந்தனர்.

முதல் நாள் ஒத்திகைக்கு நான் சைக்கிள் மிதித்துப் போய்ச் சேர்ந்தேன். இரவு எட்டு மணிக்கு ஒத்திகை துவங்கியது. ஒரு நீள கணக்குப் பிள்ளை நோட்டைத் தூக்கிக்கொண்டு இயக்குனர் தாமரைக்கண்ணன் வந்து சேர்ந்தார். அன்று அனைத்து நடிகர்களும் வந்து சேர்ந்த பின்பு, ஊரின் முக்கியஸ்தர் முன்னிலையில் ஒவ்வொரு நடிகருக்கும் உண்டான கதாபாத்திரங்கள் ஒதுக்கப்பட்டன. "மச்சான் நீங்க இதை எடுத்துக்கங்க." "மாமா நீங்க காமெடி ரோல் பண்ணுங்க." "சித்தப்பா நீங்க வில்லன்" என்று அவரவர்களுக்கான கதாபாத்திரங்கள் ஒதுக்கப்பட்டு, அவர்களுக்கான வசன பாடமும் தரப்பட்டது.

முதல் நாளன்று, துவக்கத்தில் வரும் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடலாமா என்று இயக்குனர் கேட்டார். மற்றவர்கள் எல்லாரும் ஒப்புக்கொண்டனர்.

"சரி ஒரு தடவை பாடுங்க!" என்றார் இயக்குனர்.

"ரொம்ப வருசத்துக்கு முன்னாடி படிச்சது. இப்ப ஞாபகத்துக்கு வருமான்னு தெரியல" என்று நகைச்சுவை நடிகர் சந்தேகம் எழுப்பினார்.

“இருக்கட்டும். ஒரு தடவை முயற்சி பண்ணிப் பாப்பமே!” என்றார் இயக்குனர்.

எல்லாரும் வரிசையாக பிள்ளையார் சிலையின் முன்னே நின்று கொண்டு, ஒரே குரலில், “அம்மாவும் நீயே. அப்பாவும் நீயே” என்று பாடினார்கள். அனைவருக்கும் அந்தப் பாடல் மனதிலேயே நின்றிருந்தது. இயக்குனருக்கு ஆச்சரியம். எப்படி பல வருடங்களுக்கு முன்பு பாடிய பாடலை, அதே குரலில், அதே ஸ்தாயியில் பாட முடிந்தது என்று வியந்தபடி இருந்தார். பாடி முடித்ததும் எல்லோரும் கை தட்டினார்கள். அன்றோடு எங்கள் ஒத்திகை முடிவுக்கு வந்தது. அடுத்த நாள் இரவு ஒத்திகையில் வசன நோட்டுப் புத்தகத்தை என்னிடம் ஒப்படைத்த இயக்குனர், “சார் நீங்க வசன நோட்டை வெச்சுக்கங்க. சீனை ஒட்டிக்கிட்டு இருங்க. நான் வந்துர்றேன். என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார். அவர் திரும்பி வருவார் என்று நான் காத்திருக்காமல், வசன நோட்டுப் புத்தகத்தை வைத்துக்கொண்டு நடிகர்களுக்கு நடிப்பு சொல்லித் தந்து கொண்டிருந்தேன்.

அடுத்த நாள் ஒத்திகைக்கு வந்திருந்த புதியவர் ஒருவரை எனக்கு அறிமுகப்படுத்திய இயக்குனர்,”சார், இவர் தான் பழனி பாலன். சினிமாவுல சேரணும்னு ஆசையா இருக்காரு. இவரும் என்னைய மாதிரி தான்!” என்றார். அன்றைய தினம் நானும் பழனி பாலனும் ஒத்திகையில், இயக்கும் வேலையைச் செய்தோம். நாடக இயக்கம் என்றால் என்னவென்று எனக்கு உண்மையில் எதுவுமே தெரியாது. சிறு வயதில் நான் பார்த்த நாடகங்கள்தான் எனக்கு நல்ல வழிகாட்டி என்று சொல்லுவேன்.

அத்துடன் எனது தமிழாசான்கள் சொல்லித் தந்த தொல்காப்பியரின் “நகையே அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் வெகுளி உவகை” என்ற எட்டு மெய்ப்பாடுகளுக்கான சூத்திரம் என் மனதில் நிலையாக நின்று கொண்டிருந்தது. சமஸ்கிருத இலக்கிய நெறியின்படி மெய்ப்பாடு எட்டு அல்ல, ஒன்பதாகும். அதை நவரசம் என்று சொல்கின்றனர். அவை யாவன : சிருங்காரம் (காதல், அழகு) சிரிப்பு, சோகம், கோபம், வீரம், பயம், வெறுப்பு, அதிசயித்தல், சாந்தம் (அமைதி) இவற்றையே எனது பால பாடங்களாக மனதில் கொண்டும், கல்லூரியில் படித்த சமஸ்கிருத இலக்கியங்களில் சொல்லப்பட்ட நாடகங்களின் அக கட்டமைப்பு (inner structure of a play) போன்றவற்றையும் என் வழிகாட்டியாகக் கொண்டு நாடகத்தை இயக்கினேன்.

அடியேன் இயக்கிய “பொற்கோவில்” நாடகத்தின் பொன்னான கதை இது தான்... ஏலக்காய்த் தோட்டம், தேயிலைத் தோட்டம் முந்திரித் தோட்டம் என்று வசதியாக இருக்கும் நிலப்பிரபுதான் நாடகத்தின் மைய கதாபாத்திரம். அவருக்கு ஒரே ஓர் அழகான மகள். அந்த நிலச்சுவான்தாரரிடம் மேனேஜராக வேலை பார்க்கும் ஆள் தான் கதாநாயகன். அவனது நேர்மையைக் கண்டு அவன்மேல் காதல் கொள்ளுகிறாள் கதையின் நாயகி. கதாநாயகியின் அழகில் மயங்கி அவளைக் கல்யாணம் பண்ணிக்கொள்ள கடும் முயற்சிகளை மேற்கொள்ளும் அந்தப்பெண்ணின் மாமன்தான் நாடகத்தின் வில்லன். வில்லனின் வில்லத்தனங்களை எதிர்த்துப் போராடி விட்டு, தன் காதலியான கதாநாயகியை கைப்பிடிக்கிறான் நாயகன். இடையிடையே நிறைய ஆடல் பாடல்கள்....! எல்லாம் டப்பாங்குத்து பாடல்கள். இப்படி மாமன்னர் ஹர்ஷ வர்தனர் காலத்திய கதையை வைத்துக்கொண்டுதான், அதற்குத் தானே “கதை- திரைக்கதை-வசனம் –இயக்கம்” என்றெல்லாம் ஜம்பமாக எல்லாரிடமும் சொல்லிக் கொண்டிருந்தார், அத்திகுளத்து அருமை இயக்குனர் அண்ணன் தாமரைக்கண்ணன் அவர்கள்.

வசன ஒத்திகையின் போது, நடிகர்கள் தவறாக உச்சரிப்பு செய்தாலோ அல்லது பேச்சின் ஏற்ற இறக்கங்களில் தவறு செய்தாலோ, உடனே நான் "கட் கட்" என்றுதான் சொல்லுவேன். எனக்குள் இருக்கிற திரைப்பட இயக்குனர்தான் அவ்வாறு சொல்ல வைப்பார். நடிகர்கள் என்னை விநோதமாகப் பார்த்தார்கள். நான் அதைப்பற்றி கவலைப்படவில்லை. தொடர்ந்து நடிகர்களை இடைவிடாமல் வேலை வாங்கினேன். நான் இணை இயக்கத்தில் ஈடுபட்ட போது எனக்கு எந்தச் சம்பளமும் வழங்கப்படவில்லை. வேலை செய்யும்போது ஒரு சாயாத் தண்ணி கூட தரவில்லை. இயக்குனர் ஃபில்டர் செய்து வடிகட்டிய கஞ்சனாக இருந்தார். பிஸ்கட்டும் சாயாத்தண்ணியும் தருவார்கள் என்று நான் எதிர்பார்த்து அங்கு போகவில்லை. ஆனால் நாடகத்தின் தயாரிப்புச் செலவு ரூபாய் பதினைந்தாயிரம் என்று எனக்கு இயக்குனர் சொன்னார். தொடர்ந்து ஒரு மாதம் இடைவெளியின்றி ஒத்திகை நடந்த பிறகு நடிகர்கள் வசன நோட்டுப் புத்தகத்தைப் பார்க்காமலேயே மடமடவென்று வசனங்களை ஒப்பித்தார்கள். அதுவே எனக்குப் போதுமானதாக இருந்தது.

ஒருநாள், கடை வீதியில் உள்ள நகைக்கடையின் வாசலில் ஒரு மஞ்சள் அட்டை தொங்கிக் கொண்டிருந்தது. அது என் கவனத்தைக் கவரவே அருகில் சென்று பார்த்தேன். அது அத்திகுளம் அருள்மிகு பெரிய மாரியம்மன் திருக்கோவில் சித்திரை விழாவுக்கான விளம்பரம். அதில் அன்றாடம் நடைபெறும் நிகழ்ச்சிகளின் பட்டியல் தரப்பட்டிருந்தது. நான்காவது வரிசையில் இயக்குனர் தாமரைக்கண்ணனின் இயக்கத்தில் "பொற்கோவில்" என்னும் சமூக நாடகம் நடைபெறும் என்ற வரிகள். அவரது பெயருக்கு கீழே என்னுடைய பெயர் போடப்பட்டு "இணை இயக்கம்" என்று பதவியும் தரப்பட்டிருந்தது.

அடுத்த நாள் தாமரைக்கண்ணன் என்னிடம், "சார், நாடகம் நடக்குற அன்னிக்கு உங்களுக்கு மேடையில் வெச்சு பொன்னாடை போர்த்துவங்க. அதை வேணாம்னு சொல்லாதீங்க!" என்றார். நான் 'சரி' என்றேன்.

நாடக ஒத்திகை முடிந்து, ஓரளவுக்கு நடிகர்களுக்கு மேடை ஏறும் நம்பிக்கை வந்தபோது, என்னுடைய சட்டக் கல்லூரி தேர்வுகள் வந்து விட்டன. என்ன செய்வது? எனது நாடகப்பணியை அப்படியே சக இயக்குனர் பழனி பாலனிடம் தந்துவிட்டு, நான் தேர்வுகளுக்கு ஆயத்தமாகத் தொடங்கினேன். பிற்பாடு, அந்த "பொற்கோவில்" நாடகம் மிகவும் வெற்றிகரமாக நடந்ததாக பின்னாளில் என்னிடம் தாமரைக்கண்ணன் சொன்னார். நான் நாடக இயக்கத்திலிருந்து விலகி விட்டதால் அது வெற்றியடைந்திருக்கக் கூடும். அதுதான் நிஜம்....! அவ்வளவுதான். அமெச்சூர் நாடக மேடைக்கும் எனக்கும் இருந்து தொடர்பு அன்றோடு அறுந்தது. இப்போது சரியாக இருபத்தாறு ஆண்டுகள் கழித்து அதே இயக்குனர் என்னை 'மீண்டும் நாடகம் இயக்க வாங்க!' என்று அழைக்கிறார்.

**மீண்டும் நாடகம் புக்கு படலம் :**

நாடகங்களின் மேல் நான் அபிமானம் கொண்டதற்குக் காரணம் எனக்குப் பிடித்தமான ஆங்கில நாடக மாமேதை வில்லியம் ஷேக்ஸ்பியர் என்னுடைய சிந்தையில் வந்து ஆக்கிரமித்து நிற்பதனால் தான். எனது வீட்டில் உள்ள எனது அலுவலக அறையில் என் இருக்கைக்கு நேர் எதிரே உள்ள சுவரில் ஷேக்ஸ்பியர் தொங்கிக்கொண்டிருக்கிறார். பம்மல் சம்பந்த முதலியார் எழுதிய சுயசரிதையான "எனது நாடக மேடை நினைவுகள்" என்ற நூலை எங்கள் ஊரின் பென்னிங்டன் நூலகத்தில் இருந்து எடுத்து வாசித்து விட்டு, அந்த நூல் தந்த பிரமையில் சில

மாதங்கள் இருந்தேன். தூத்துக்குடி சங்கரதாஸ் சுவாமிகளின் நாடகப் பிரதிகளின் தொகுப்பையும் வாசிக்கும் வாய்ப்பு கிடைத்தது. இவை எனக்குள் உண்டாக்கிய ரசாயன மாற்றங்களே என்னை ஒரு திரைக்கதை ஒன்றை எழுதத் தூண்டியது. நாடகம் என்பது என்னைப் பொறுத்தமட்டில் ஒரு கலை. அதுவும் ஒருவகை இலக்கியம். காட்சி இலக்கியம். நாடகம் ஆடுபவனை "கூத்தாடி" என்று சொல்லுகின்றனர். அது சரிதான்..!! இந்த பிரபஞ்ச நாயகனான எம்பெருமான் சிவபெருமானே, தில்லை பொன்னம்பலத்தில் இடது பதம் தூக்கி ஆடும் கூத்தாடிதான். உயிர்களின் செயல்பாடு என்பது ஒருவகை கூத்தே!

"அனைத்து உலகமும் ஒரு நாடக மேடை.

அதில் சகல ஆடவரும் பெண்டிரும் நடிகர்கள்.

ஒவ்வொரு நடிகருக்கும் நுழைவும், வெளியேறுதலும் உண்டு"

என்று வாழ்வியலுக்கு நாடக மேடையை உருவகப்படுத்திச் சொல்லுவார் வில்லியம் ஷேக்ஸ்பியர்.

*All the world's a stage,*

*And all the men and women merely players;*

*They have their exits and their entrances,*

...இருபத்தாறு ஆண்டுகள் கழிந்து விட்டன. என் தலையில் ஒரு முடி கூட கருமையாக இல்லை. இப்போது என்னை நாடகம் இயக்க இவர் அழைக்கிறார். நான் உடனே ஒப்புக்கொள்ளுகிறேன். அது, ஏதோ இதன் மூலமாய் நான் சம்பாதிக்கலாம் என்றோ, புகழ் அடையலாம் என்பதாலோ அல்ல. நாடகம் குறித்த ஆங்கில இலக்கியத்தின் கல்லூரிப் பாடங்கள் என்னுள்ளே ஆழமாகப் பதிந்து விட்டன. ஒரு மர நாற்காலியை சட்டம் சட்டமாக பிரிப்பது போல, ஒரு நாடகத்தையும் பிரித்து விடலாம். இன்பியல், துன்பியல் அல்லது இரண்டும் கலந்த இன்ப - துன்பியல் நாடகம், சரித்திரம், சமூகம், நாடோடி வகை என்றெல்லாம் வகைப்படுத்தி விடலாம். இந்த முறையான அணுகுமுறையைக் கற்றதனால் அதைப் பரீட்சை செய்து பார்க்க ஒரு நாடகம் தேவைப்பட்டது. இதோ, தாமரைக்கண்ணன் என்னிடம் மாட்டிக்கொண்டார். நாங்கள் நீண்ட நேரம் கதைத்துக் கொண்டிருந்தோம். பிறகு, அவர் என்னிடம் விடை பெற்றுக்கொள்ளும் போது,

"சார், முழு திரைக்கதையையும் எழுதி முடிச்ச பின்பு சொல்லுங்க. நாம அதை மேடை ஏத்தலாம்" என்று சொன்னேன்.

தாமரைக்கண்ணன் என்னிடம் விடை பெற்றுச்சென்று விட்டார். சொல்லி விட்டு அதை அப்படியே மறந்து விட்டேன். எனக்கென்று சட்டப் பணிகள் இருந்தன.

இடையிடையே எனக்கு தாமரைக்கண்ணனின் நாடகத்தினைப் பற்றிய ஞாபகம் வரும். போன் செய்வேன். "இதோ எழுதிக்கொண்டே இருக்கேன் சார்!" என்பார். 'சரி!' என்று கூறி போனை துண்டித்து விடுவேன். இப்படி தொடர்ந்து கேட்டுக்கொண்டே இருந்த காரணத்தால் அவரது எழுத்து வேகம் கூடியது போலும். ஒரு நாளைக்கு ரெண்டு காட்சிகளுக்கு மேல் எழுத முடியவில்லை என்றும், அதற்கு மேல் எழுதினால் தலைவலி வருகிறது என்று வேறு சொல்லியிருந்தார்.

"உங்களது நாடகத்தைப் பார்க்கும் ரசிகர்களுக்கு தலைவலி வராதா?" என்று நான் கேட்கவில்லை.

இப்படியே சில நாட்கள் போன பின்பு, நான் போன் செய்தபோது, "சார் இதோ க்ளைமேக்ஸ் எழுதிக்கொண்டிருக்கிறேன்" என்றார். "இதோ முடிக்கப் போறேன். இதோ இன்னும் ரெண்டு நாளில் முடிந்து விடும்" என்று சொல்லிக்கொண்டே

இருந்தாரே தவிர முடித்து விட்டேன் என்று முடிவான வார்த்தையைச் சொல்ல வில்லை.. எனக்கோ பொறுமை அத்து விட்டது.

ஒருநாள் மாலையில் என் வண்டியை எடுத்துக்கொண்டு, பெட்ரோல் நிரப்பிக்கொண்டு, நேராக சிவகாசி போய் விட்டேன். சிவகாசியின் கிழக்குப் பகுதியில், ஏதோ ஒரு தெருவில், ஒரு வீட்டின் முன்புறம் இருந்த சிறு அறையை இவருக்கு ஒதுக்கிக்கொடுத்திருந்தார்கள். அதுவே இவரது சைக்கிள் கடை. கடைக்கு பெயரெல்லாம் கிடையாது.

நான் போனதும் "டீ சாப்பிடுங்க!" என்றார். எனக்கோ டீ குடிக்கும் மனநிலை எல்லாம் இல்லை. உங்களோட வசன பிரதியைக் காட்டுங்க என்றேன். தனது பிரசித்தி பெற்ற கடைக்குள் தலையை நுழைத்து, பழைய இரும்புச் சாமான்களுக்கு மத்தியில் இருந்த அழுக்குப்பையில் கையை நுழைத்து ஒரு நீண்ட கணக்கு எழுதும் பழுப்பு நிற, கெட்டி அட்டை ரெஜிஸ்டரை எடுத்துக் காட்டினார். ஆர்.கே.நாராயண் தனது நாவல்களில் வருணிக்கும் "buff register" என்பது அது தான் என நான் எண்ணிக்கொண்டேன். மொத்த வசன பக்கங்கள் 137 இருந்தது. அவரோ, வசனங்களை எல்லாம் பச்சை நிற பால் பாய்ண்ட் பேனாவால் எழுதியிருந்தார். இந்த உலகிலேயே பச்சை நிற பால் பாய்ண்ட் பேனாவால் வசனம் எழுதிய முதல் பிரஹஸ்பதி எங்கள் அண்ணன் தாமரைக் கண்ணன் தான்.

மொத்தக் காட்சிகள் 42 இருந்தன. அந்த பழைய துருப்பிடித்த இரும்புக் கடைக்கு, மன்னிக்கவும், சைக்கிள் கடைக்கு எதிராக இருந்த ஒரு அச்சகத்தின் படியில் அந்த பெரிய கணக்குப்பிள்ளை ரெஜிஸ்டரை வைத்து, அதை விரித்து, என் செல் போனின் துணை கொண்டு, இயக்குனரின் வசன பக்கங்களை புகைப்படம் எடுக்க ஆரம்பித்தேன்.

"சார், நான் இன்னும் எழுதி முடிக்கல. க்ளைமேக்ஸை மாத்தி இன்னொரு தடவை எழுதணும் என்று சொன்னார் அந்த ஹாலிவுட் இயக்குனர்,

"பரவாயில்ல சார்! இவ்வளவு எழுதியிருக்கீங்கள்ல.... அதுவே போதும்!" என்று சொல்லிவிட்டு, தொடர்ந்து பக்கங்களை புகைப்படம் எடுத்து முடித்தேன்.

...இரவு சீக்கிரமாக சாப்பிட்டுவிட்டு தூங்கி விட்டேன். காலை மூன்று மணிக்கு விழிப்பு வந்தது. எப்போதும் கண் விழிப்பது மூன்று மணியே! என் கணினியை இயக்கி, முந்தின நாள் சிவகாசியில் நான் எடுத்து வந்திருந்த புகைப்படங்களை என் கணினியில் நுழைத்து, ஒவ்வொன்றாக பக்கம் பக்கமாக அச்சிட்டேன். பச்சை நிற பால் பாய்ண்ட் பேனாவால் வசனங்கள் எழுதப்பட்டிருந்ததால், நிறைய பக்கங்கள் கருப்பாக திட்டுத்திட்டாக அச்சாகி வெளியே வந்தன. அவைகளைத் தொகுத்துக் கொண்டு, பிறகு நிதானமாக வாசிக்கத் தொடங்கினேன். வாசிக்க, வாசிக்க, எனக்கு கதை எந்தப் போக்கில் போகும் என்பது தெரிந்து விட்டது. முழுக்க வாசித்ததும், அது ஏதோ பல வருடங்களுக்கு முன்பு வெளி வந்த ரஜினி காந்த், கமல ஹாசன் ஆகியோரின் திரைப்படங்களின் கதையைப் போலவே இருந்தது. கதையின் முடிச்சைக் கண்டு கொண்டேன். மனிதன் கில்லாடி தான்...!

நான் இருபத்தாறு வருடங்களுக்கு முன்பாக அத்திகுளம் கிராமத்தில், இணை இயக்கம் செய்த அதே "பொற்கோவில்" என்ற நாடகத்தின் அச்சு அசல் மறுபதிப்பு. பாத்திரங்களின் பெயர்கள் மாத்திரம் மாற்றப்பட்டிருந்தது. இது ஒருவருக்கும் தெரியக்கூடாது என்பதற்காக நாடகத்தின் பெயரை "இனி வசந்தமே!" என்று மாற்றியிருந்தார் இயக்குனர் பெருமான். இப்படி அஜால் குஜால் வேலைகளைச் செய்துவிட்டு, என்னிடம் "நாடகம் எழுத

ரொம்ப கஷ்டப்பட்டேன் என்று வேறு சொல்லிக்கொண்டார். தார்ப்பாயில் வடிகட்டிய பொய்!

தன்னுடைய கதையை தானே திருடி, அதற்கு மீண்டும் உயிர் தந்த நமது இயக்குனர்!! "இனி வசந்தமே!" வசனப் பிரதியை முற்றிலுமாக வாசித்து முடித்ததும் அதைத் தட்டச்சு செய்யலாமா என்று தோன்றியது. பிறகு, பக்கம் பக்கமாக அதைக் கணினியில் தட்டச்சு செய்யத் தொடங்கினேன். காட்சிகளெங்கும் எழுத்துப் பிழைகள், இலக்கணப் பிழைகள் மலிந்து கிடந்தன. தமிழ்த்தாத்தா உ.வே.சா. அதைப் படித்தால் கோபித்துக் கொள்வார் என்று தோன்றியது. "சமையலரை" என்று எழுதியிருந்தார் நமது இலக்கணப்புலி. "அவன் அவளைப் பார்த்துக்கொன்டே" என்றும் எழுதியிருந்தார். "கண்ணன் விறைவாக வருகிறான்." இந்தத் தமிழை வாசிக்க அகத்தியன் உயிரோடு இல்லையே என எண்ணி ஆறுதல் கொண்டேன். இப்படி வல்லினத்துக்கும் மெல்லினத்துக்கும் இடையே உள்ள வித்தியாசம் தெரியாத ஒரு நாடக மேதை எனக்கு வாய்த்துள்ளார். ஒரு வழியாக அந்த வசனப் பிரதி என்னும் எழுத்து தண்டனையை தட்டச்சு செய்து முடித்தேன். மொத்தம் 98 பக்கங்கள் வந்தது. பிறகு ஒரு பக்கக் காகிதத்தில் அச்சடித்து, அதன் முதல் உத்தேச பிரதி எடுத்து, தயார் செய்துகொண்டேன்.

நாடகத்தின் மைய கதாபாத்திரங்களாக, கண்ணன் - ராதா இணையர். ராதா பண்ணையார் விஸ்வநாதனின் தங்கை தனத்தின் மகள். தனம் சாகும்போது, விஸ்வநாதனிடம், தனது மகளை எப்படியாவது கல்யாணம் செய்து தந்து விட வேண்டியது அவனது கடமை என்று சொல்லிவிட்டு இறந்து போகிறாள். அதனால், ராதாவின் மேல் அன்பைப் பொழியும் பண்ணையார் விஸ்வநாதன், அவளை தனது மகன் ரஞ்சித்துக்கு திருமணம் முடிக்க எண்ணுகிறான். ரஞ்சித் ஒரு பெண் பித்தன். மது, மாது என்று சகல பாவங்களிலும் திளைக்கிறான். விஸ்வநாதனிடம் புதிதாக மேனேஜர் வேலைக்குச் சேரும் கண்ணன் மீது ராதாவுக்கு ஒரு 'இது'...! இருவரும் ஒருவரை ஒருவர் விரும்புகின்றனர். அதற்கு ரஞ்சித் குறுக்கே நிற்கிறான். க்ளைமாக்ஸ் காட்சியில், ராதாவை தனது கோட்டைக்கு கடத்திச் செல்லுகிறான் ரஞ்சித். அங்கு விரைந்து வரும் கண்ணன் ராதாவை மீட்கிறான். பண்ணையார் தன் முடிவை மாற்றிக்கொண்டு, கண்ணனுக்கு ராதாவை மணமுடிக்கிறார்......! இதுவே "இனி வசந்தமே!" நாடகத்தின் காவியத் திரைக்கதை.

"சண்முகம்-கோட்டி" என்ற இரு கதாபாத்திரங்கள்தான் விதூஷகர்கள். அவர்களது வசனங்களைப் படித்தால் அது, கவுண்டமணி மற்றும் செந்தில் இணையரின் வசனங்களை அப்படியே அடியொற்றியதுதான் எனத் தெரிய வரும்!

"ஏண்டா பேரிக்காய் மண்டையா! ஏண்டா என்னையவே அப்படி பாக்குற?" என்ற ரீதியில் வசனங்கள். பல இடங்களிலும் அருவருப்பான வசன வீச்சுக்கள்.... வாசிக்கும் போதே முகம் சுழிக்க வைக்கும் வரிகள்...!

வசன பிரதியை அச்சடித்து தயார் செய்ததும், அதை ஒரு கெட்டி அட்டை கோப்பில் வைத்து, இயக்குனர் பெருமானிடம் தந்தேன். மிகவும் ஆச்சரியப்பட்டுப் போனார்."

"எல்லாரும் எள்ளுன்னா, எண்ணையா இருப்பாங்க. ஆனா நீங்க வில்லுன்னா அம்பா இருக்கீங்க சார்!" என்று ஒரு 'குத்து வசனத்தை' விட்டார். (punch dialogue - தமிழில் "குத்து வசனம்")

நடிகர் தேடு படலம் :

நாடகத்தின் வசன பிரதி தயார். இனி மேல், இதற்கு ஏற்ற மாதிரி நடிக்க "இளிச்சவாயன்" நடிகர்களைப் பிடிக்க வேண்டும்..

“சார் கவலைப்படாதீங்க சார்! நான் சிவகாசியிலேயே ஆட்களைப் பிடிச்சுட்டு வந்துருவேன்” என்று என்னிடம் சவடால் அடித்தார் இயக்குனர்.

நான் நம்பினேன். நாடகத்தில் வரும் இன்ஸ்பெக்டர், ஏட்டு, போலீஸ் கான்ஸ்டபிள் ஆகியோரின் கதாபாத்திரங்களுக்குத் தேவையான ஆட்களைத் தேட ஆரம்பித்தார். தான் வைத்திருக்கும் கடைக்கு யாராவது பஞ்சர் ஒட்ட சைக்கிளை தள்ளிக்கொண்டு வந்தால் போதும். நமது இயக்குனர் அவரை ஒரு கோணத்தில் ஏற இறங்கப் பார்ப்பார்.

அதன் பின்பு, “சார் உங்களுக்கு நல்ல முக வெட்டு இருக்கு. என்னோட நாடகத்துல நடிக்க வர்றீங்களா?” என்று வலை வீசுவார். இப்படியாக ஓரிருவரைத் தேற்றி விட்டார். இந்த நாடகக்காரனின் இம்சை தாங்காமல் பலரும் தங்கள் சைக்கிளை பழுது பார்க்காமலேயே வைத்திருந்ததாக எனக்கு தகவல் வந்து சேர்ந்தது.

சில நேரங்களில் நடிகரைத் தேர்வு செய்வார். பிறகு, அவரே ஏதோ ஒரு காரணத்தைச் சொல்லி அவனை நீக்கி விடுவார். எல்லாவற்றுக்கும் ஒரே காரணம் தான் இருக்கும். நடிக்க வருபவர் சம்பளம் கேட்டிருப்பார். நம்ம ஆளிடம் அந்தக் கதையெல்லாம் ஆகாது. நடிக்க வருபவனே பார்த்து ஏதாவது பணம் கொடுத்தால், அதையும் வாங்கிக்கொள்ளத் தயாராக இருந்தார் நம்மவர். பலரையும் நடிக்க அழைத்த போது, அவர்கள் மறுத்த காரணம் என்னவென்றால் “சினிமாவுல நடிக்கணும்னா வர்றேன். ஆனா, நாடகம்னா வேண்டாம்” என்றார்கள். ஒரு ஆள் நாடகம் என்றதும், தொலைக்காட்சி நெடுந்தொடர் என்று நினைத்துக்கொண்டார். ஆனால் மேடை நாடகம் என்றதும் விலகிக்கொண்டார். “சார், நானும் சரியான ஆளுகளைத் தேடிக்கிட்டுத்தான் இருக்கேன். ஆனா கிடைக்க மாட்டேங்குறாங்க, என்று தொலைபேசியில் அலுத்துக்கொண்டார் தாமரைக்கண்ணன். நடைமுறை உலகில், இந்த மாதிரி நாடகம் நடிக்க, தனது சொந்த வேலைகளை விட்டுவிட்டு வருபவர்கள், ஏதாவது ஒருநாள் சம்பளமாவது எதிர்பார்க்கிறார்கள். ஆனால் நம்மவரிடமிருந்து நயா பைசா நகலாது. கிட்டத்தட்ட “காதலிக்க நேரமில்லை” நாகேஷ் போலவே நமது சைக்கிள் கடைக்காரர் மாறி விட்டார்.

ஒருநாள் என்னிடம் போன் செய்து, இன்ஸ்பெக்டர் வேடத்திற்கு ஒரு ஆள் கிடைத்து விட்டதாகவும், நல்ல உயரமானவராக இருப்பதாகவும் சொன்னார். மிகவும் மகிழ்ந்தேன். மறு நாளே என்னிடம் போன் செய்து “சார், அந்த ஆளுக்கு வசனமே பேச வரல. இவன வெச்சுக்கிட்டு நாம என்ன செய்ய?” என்றார். இப்படியாக நடிகர்கள் தேடும் வேட்டையில் நாட்கள் கழிந்து கொண்டிருந்தன.

நான் அவரிடம் நல்லதொரு யோசனை சொன்னேன். “சார், ஒன்னும் அவசரமில்லை. நிதானமா நாம ஆளுகளைத்தேடுவோம். அதுக்கப்புறம் நடிகர்களுக்கு ஒத்திகை வைப்போம். அவங்க நல்லா வசனம் பேசி, அவங்களை மேடை ஏத்தலாம்னு தெரிஞ்சதும் அதுக்குப் பின்னாடி, நீங்க ப்ரோக்ராம் வாங்குங்க” என்றேன்.

**ஸீன் செட்டிங்காரனிடம் மாட்டிக்கொண்ட படலம்**

நாட்கள் கழிந்து கொண்டிருந்தன. தினசரி நமது சிவகாசிக்காரரிடமிருந்து போன் வந்துவிடும். ‘அதைப் பண்ணினேன் இதைப் பண்ணினேன். அவரைப் பார்த்தேன் இவரைப் பார்த்தேன்’ என்று.

“சார் இந்த நாடகம் முடிஞ்சதும், நாம ரெண்டு பேரும் நேரா திருவனந்தபுரம் போறோம். அங்க சித்ராஞ்சலி ஸ்டூடியோவுக்கு போறோம். அங்க

வெச்சு நாம ஒரு மலையாளப் படம் பண்றோம். இது உறுதி. இதுல மாற்றமே இல்ல'' என்றார்.

மலையாளப் படம் என்றதும், நமது தமிழர்கள் வாயிலிருந்து உமிழ் நீர் வடிய அதைப் பார்ப்பார்கள் என்பது எனக்கும் தமிழ் கூறும் நல்லுலகிற்கும் நன்கு தெரியும். ஆனால், நம்மவரின் திரைக்கதை, "அஞ்சரைக்குள்ள வண்டி", "ஆருண்டு இவ்விட சோதிக்கான்'' "கின்னரத் தும்பிகள்'' என்ற ரீதியிலான "சிங்கியா-முங்கியா'' கதையெல்லாம் அல்ல. அது ஒரு நல்ல காதல் கதை.

ஒருநாள் காலையில் எனக்கு இயக்குனரிடமிருந்து போன் வந்தது.

"சார், இன்னிக்கு எங்கயும் போயிராதீங்க. புளியங்குடியில இருந்து ஸீன் செட்டிங்ஸ் போடுற அய்யப்பன் வர்றார். அவரை உங்க வீட்டுக்கு நேரடியா வரச் சொல்லிட்டேன். அங்க உங்க வீட்டுல வெச்சு ஒரு ஒப்பந்தம் எழுதணும். நீங்க வீட்டுலயே இருங்க. அய்யப்பன் ஒன்பது மணி வாக்குல உங்க வீட்டுக்கு வருவாரு. நானும் வந்துருவேன்'' என்றார்.

நான் எனது வேலைகளை ஒதுக்கி வைத்துவிட்டு, அய்யப்பனுக்காக காத்திருந்தேன். அய்யப்பன் என்றால் அவர் வன்புலி வாகனன் அல்லவா? கையில் வில்லும் அம்பும் ஏந்தியபடி புலியின் மேல் வருவார் என்று எண்ணியிருந்தேன். ஆனால் அவரோ காலில் செருப்பு கூட போடாமல், வெயிலில் என் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். அறுபதுகளில் இருக்கும் வயது என்பது அவரது முகத்தைப் பார்த்ததுமே தெரிந்து விட்டது. மாநிறத்தில் இருந்தார். (அதாவது கருப்பு நிறம் தான்). வெள்ளை சட்டை, வெள்ளை வேட்டியில் செட்டி நாட்டு நகரத்தார்கள் போன்று தெரிந்தார். அவருக்கு தேத்தண்ணியும், பிஸ்கட்டும் தந்துவிட்டு பேசிக்கொண்டிருந்தேன். தான் இந்த நாடகத்திரை கட்டும் வேலையை முப்பத்தைந்து வருடங்களாக செய்துகொண்டு வருவதாகவும், சில திரைப்படங்களில் தலை காட்டியிருப்பதாகவும், திரைப்படங்களுக்கு துணை நடிகர் ஏஜென்டாக வேலை செய்திருப்பதாகவும், சில தொலைக்காட்சி நெடுந்தொடர்களில் நடித்திருப்பதாகவும் சொன்னார். திரைத்துறையோடு தொடர்புடையவர் நாடகத்திற்கு திரை கட்ட வந்திருந்தார். தற்போது தனது முதிர்ந்த வயதிலும் கூட, தான் கதாநாயகன் வேடத்தில் நடிக்கத் தயாராக இருப்பதாகச் சொன்னார்.

நானும் அய்யப்பனும் தாமரைக்கண்ணனுக்காக காத்திருந்தோம். தாமரைக்கண்ணனோ சாவகாசமாக பத்தரை மணிக்குத்தான் வந்து சேர்ந்தார். இயக்குனர் என்றால் கால தாமதமாகத் தான் வருவது என்பது வழக்கமோ?

இயக்குனர் என்னிடம், தான் இயக்கும் நாடகம், மே 25-ந்தேதி அன்று எங்கள் ஊருக்கு வடக்கே கிருஷ்ணன்கோவில் அருகே இருக்கும் குன்னூரில் நடைபெறும் என்றும், அந்த நிகழ்ச்சிக்காக நாடக ஸீன் செட்டிங்ஸ் தொடர்பான ஒப்பந்தம் ஒன்றை நான் தயாரிக்குமாறு என்னிடம் கேட்டுக்கொண்டார். நான் என் கணினியை இயக்கி, சீன் செட்டிங் கம்பெனிக்கும் இயக்குனர் தாமரைக்கண்ணனுக்கும் போட்டுக் கொள்ளுவதற்கான பரஸ்பர ஒப்பந்தத்தை தட்டச்சு செய்ய ஆரம்பித்தேன்.

ஒப்பந்தம் அடித்து முடிந்ததும், நான் அதை அச்சடித்துத் தந்தேன். இருவரும் அதில் கையொப்பம் இட்டனர். அந்த ஒப்பந்தத்தின் இரு பிரதிகளையும் ஆளுக்கு ஒன்றாக இருவரிடமும் தந்தேன். இயக்குனர் தன்னுடைய பேண்ட் பாக்கெட்டிலிருந்து ரூபாய் பத்தாயிரத்தை எடுத்து அய்யப்பனிடம் தந்தார். நான் தயார் செய்த ஒப்பந்தத்தின்படி நாடகம் நடக்கும் நாளன்று புளியங்குடி அய்யப்பன் அந்த நாடகத்திற்கான ஸீன் செட்டிங்ஸ்,

நடிகர், நடிகைகள், இசையமைப்பு, அரிதாரப் பூச்சு ஆகியவைகளுக்கு சேர்த்து ஒட்டுமொத்தமாக ரூபாய் முப்பதாயிரம் பெற்றுக்கொள்ளுவதாகவும், அதற்கு முன்பணமாக அந்த பத்தாயிரம் தரப்பட்டதாகவும் இருந்தது. இருவரிடமும் கையெழுத்து பெற்று, இருவரையும் அனுப்பி வைத்தேன். ஒப்பந்தத்தை போட்டு முடித்ததும் அது ஏதோ "நேட்டோ" -நாடுகளின் ராணுவ ஒத்துழைப்பு தொடர்பான ஒப்பந்தம் என்ற அளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்த ஒப்பந்தம் என்று நாங்கள் எண்ணிக்கொண்டோம்.

**வில்லனை நாயகன் தேடிய படலம்**

இந்த நாடகம் இயக்கும் பணியில் அடியேன் செய்த பெரும் பிழை என்னவென்றால், நாடகம் நடிப்பதற்கான நடிகர்கள் அனைவரையும் நியமித்து, அவர்களுக்கு முழுமையான ஒத்திகை நடத்தி, பிறகு முழுமையான நாடகத்தையும், வசனப் பிரதியை நடிகர்கள் கையில் ஏந்தாமல் பேசி நடிக்கும் அளவுக்கு வந்த பிறகு, இந்த நாடக ஸீன் செட்டிங்ஸ் ஒப்பந்தத்தைப் போட்டிருக்க வேண்டும். ஆனால் நான் அப்படிச்செய்யாமல் என் நண்பர் அத்திகுளம் 'சத்யஜித் ரே' அவர்களை நம்பி அந்த நாடகத்தை இயக்க ஒப்புக்கொண்டது தவறுதான்.

அடுத்து வந்த சில நாட்களில், தாமரைக்கண்ணன் நடிகர்களைத் தீவிரமாகத் தேடும் பணியில் இறங்கினார். மாலையில், சிவகாசியில் ரயில் நிலையத்தில் காத்திருந்த பயணிகளைக்கூட அவர் விட்டு வைக்கவில்லை. எவ்வளவு தேடியும் அவர் தேடிய அளவுக்கு, நஸ்ருதீன் ஷா, அமிதாப் பச்சன், அனில் கபூர், சுனில் ஷெட்டி, கீர்த்தனா ஷெட்டி, ஷில்பா ஷெட்டி, வடைச் சட்டி, இட்டிலிச் சட்டி போன்ற எவரும் கிடைக்கவில்லை. அவரும் மனம் தளரவில்லை. அந்நாளைய அம்புலி மாமா கதையில் வரும் விக்கிரமாதித்தன் போல "தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமாதித்தன்" போல மனம் தளராது இருந்தார்.

எந்த ஊரிலும் கிடைக்காதது சொந்த ஊரில் கிடைத்தது போலும். நாடகத்தின் வில்லன் கதாபாத்திரமான ரஞ்சித் என்ற பாத்திரத்துக்கு அவரது சொந்த ஊரான அத்திகுளத்தில் இருந்த செல்லக்கனி என்பவரை தெரிவு செய்தார் இயக்குனர். உடனே, நானும் அவரும் என்னுடைய இருசக்கர மோட்டார் சைக்கிளில் அன்னார் செல்லக்கனியின் வீட்டுக்குச் சென்று, அவரை நேரடியாகச் சந்தித்து, வசனப் பிரதி நோட்டுப் புத்தகத்தை ஒப்படைத்தோம். இந்த செல்லக்கனி ஐம்பதுகளில் இருந்தார். வெறும் தகரக் கூரை போட்ட சின்ன வீட்டில் எளிமையாக குடியிருந்தார். தெருத் தெருவாக ஒரு பழைய சைக்கிளில் போய், எவர்சில்வர் பாத்திரம் விற்கும் வேலை செய்பவர். மாலை ஏழு மணிக்குப் பிறகு ஒரு பாட்டில் 'சோம பானத்தை' ஊற்றிக்கொண்டார் என்றால், வானில் மிதக்க ஆரம்பித்து விடுவார். இவரை ஞாயிற்றுக்கிழமை ஒத்திகைக்கு கூப்பிட நாங்கள் இரண்டாம் தடவையாக அத்திகுளம் பெருநகருக்கு சென்றபோது, செல்லக்கனி முழுமையான இந்தியக் 'குடிமகனாகி' வீட்டுக்குள் சுருண்டு படுத்திருந்தார். இப்படிப்பட்ட ஒருவரை வில்லனாக தேர்ந்தெடுத்ததற்காக தாமரைக்கண்ணனை நன்கு கடிந்து கொண்டேன். நாடகம் நடிக்கும் நாளன்று இதே செல்லக்கனி, இதே போல, ஒரு பாட்டில் சாராயத்தைக் குடித்துவிட்டு, மேடைக்கு வந்தால் என்ன செய்வது என்று நான் நேரடியாகவே இயக்குனரிடம் கேட்டேன். இயக்குனர் தலையைச் சொரிந்து கொண்டார். மறுநாளே, நாங்கள் செல்லக்கனி வீட்டுக்குப்போய், நாங்கள் தந்த வசன நோட்டுப் புத்தகத்தை வாங்கிக்கொண்டு வந்துவிட்டோம்.

பாத்திரம் விற்பவர் எந்த பாத்திரத்துக்கும் நடிக்க லாயக்கில்லாதவராக இருந்தார்.

இரண்டாம் முயற்சியாக, ஸ்ரீவில்லிபுத்தூருக்கு மேற்கே உள்ள சின்ன கிராமமான கம்மாபட்டியில் ஒரு நாடக நடிகர் இருக்கிறார் என்று கேள்விப்பட்டு, அங்கு நாங்கள் இருவரும் போயிருந்தோம். அந்த ஊரின் சமூக சாவடி அருகே, தாமாக முன்வந்து எங்களிடம் பேச்சுக் கொடுத்த ஒரு வாலிபர்தான் ஒரு மேடை நடிகர் என்றும், பி. சசிகுமார் நடித்த "குட்டிப்புலி" திரைப்படத்தில் துணை நடிகராக நடித்திருப்பதாகவும் சொன்னார். அவர் எங்களுக்கு நல்ல ஒரு மேடை நடிகராகப்பட்டதால், அவரை எங்கள் நாடகத்தில் வில்லனாக நடிக்க முடியுமா என்று கேட்டோம். ஒப்புக்கொண்டார். அன்று மாலையே நான் அவரது கம்மாப்பட்டி வீட்டுக்குப்போய், அவருக்கு வில்லனின் வசனம் அச்சடிக்கப்பட்ட காகிதங்களை ஒரு கோப்பில் வைத்து தந்துவிட்டு வந்தேன். தான் சாமி கும்பிட திருப்பதி போய்விட்டு வருவதாகச் சொன்னார். அப்படி வந்ததும் நாங்கள் அவரை ஒத்திகைக்கு சேர்த்துக்கொள்வதாகச் சொல்லியிருந்தோம். அவரது பெயர் சொக்கு. சினிமா, நாடகங்களில் நடிப்பதற்காக அவர் தன்னுடைய பெயரை "கம்மாபட்டி சொக்கு" என்று மாற்றி வைத்துக்கொண்டிருந்தார்.

...தொடர்ச்சி அடுத்த இதழில்



கவிதை

கி.சரஸ்வதி

# பழம் நினைவு

நீர்த்துளி மேவி நிற்கும் செழித்த
ஆப்பிள்களை அவள் அறியாள்
ஸ்டார் ஃப்ரூட் ட்ராகன் ஃப்ரூட்களும் அவ்வகையே

கிராமத்திலிருந்து நகரம்
ஏகி பழமுதிர் நிலையத்தில்
பணிப்பெண்ணாகிவிட்ட அவளுக்கு
நாளை வரும்போது அம்மா
எடுத்து வருவாள்

நினைவில் நீங்காத
ஈச்சம் பழங்களையும் அழிஞ்சிக் கனிகளையும்

சிவந்த இலந்தைகளை
மட்டும் இவளுடன் கதைபேசித் திரியும் செம்போத்து
உதிர்த்தெடுத்துத் தந்ததாய்
இன்னமும் நம்பிக்கொண்டிருக்கிறாள் டிஜிட்டலில்
நெல்லிக்காய் நிறுக்கும்
கிராமத்துக்காரி

ameech2004@gmail.com ■




(தமிழ்நாடு பதிவுத்துறையின் கீழ் பதியப் பெற்ற அறக்கட்டளை)

# "எழுத்து" தமிழிலக்கிய அமைப்பு

## திருமதி சௌந்தரா கைலாசம் இலக்கியப் பரிசு
## 2023ம் ஆண்டுக்கான
## ரூ.2,00,000/- (ரூபாய் இரண்டு இலட்சம்) பரிசுக்கான
## நாவல் போட்டி!

சிறந்த கதையம்சம் நிறைந்த இதுவரை வெளிவராத புதிய படைப்புகள் வரவேற்கப்படுகின்றன. கணினி அச்சிட்டு (ஸ்பைரல் பைண்டிங்) செய்யப்பட்டு, அச்சில் 200 பக்கம் முதல் 250 பக்கங்கள் வரையிலான பிரதிகள் மூன்று அனுப்ப வேண்டும்.

**முடிவு தேதி : ஏப்ரல் 30, 2024**

**நாவல்கள் அனுப்ப வேண்டிய முகவரி**

**"எழுத்து" தமிழிலக்கிய அமைப்பு,**
3C – "எல்டோராடோ"
112-A, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை – 600 034.
தொலைபேசி : 044 – 28270931
**செல் : 9486361884, 9841440410**

3C, எல்டோராடோ,
112, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,
சென்னை - 600 034.
தொலைபேசி : 044-2827 0937.

மின் அஞ்சல் : ezhuttu@gmail.com
முகநூல் : ezhuttu
ட்விட்டர் : @ezhuttu
வலைதளம் : www.ezhuttu.com

வருமான வரி சட்டம் பிரிவு 80-G பதிவு எண் : URNo AAATE5967G/05/14-15/T-0049/80G Dt.27/03/2015





கடைசிப் பக்கம் இந்திரா பார்த்தசாரதி

# ஈரத்தமிழ் – 3

குறுந்தொகையில் ஒரு பாடல். இயற்றியவர் பெயர் 'இறையனார்'. அவர் பெயரை வைத்துக்கொண்டு தமிழ் நாவலர் சரிதை ஒரு சுவாரஸ்யமான கதையையும் கட்டிவிட்டது. திருவிளையாடல் புராணத்தில் இக்கதைக்குக் கையும் காலும் முளைத்துவிட்டது. அது நமக்கு இப்பொழுது தேவையில்லை.

முதலில், குறுந்தொகைப் பாட்டைப் பார்ப்போம்

'கொங்கு தேர் வாழ்க்கை அம்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ!
பயிலியது கெழீஇய நட்பின், மயில்இயல்
செறி எயிற்று, அரிவைக் கூந்தலின்
நறியவும் உளவோ, நீ அறியும் பூவே?'

குறுந்தொகை சங்க காலத்து நூல். இங்கே பேசுகின்றவன் சங்க காலத்துத் தலைவன். தலைவியின் கூந்தல் பாயில் படுத்திருக்கிறான். மலர்களில் மணம் மோந்து, தேனைக் குடிக்கும் தும்பி(வண்டு) அவள் கூந்தலைச் சுற்றிச் சுற்றி வருகிறது. அவன் அதை விரட்டுகிறான். அது போகவில்லை. சுற்றிச் சுற்றி மீண்டும் வருகிறது. அச்சமயத்தில் அவள் மலர் ஏதும் சூடவில்லை. அப்பொழுது தலைவனுக்கு ஓர் ஐயம் ஏற்படுகின்றது. அவள் கூந்தலின் இயற்கை மணமா அத்தும்பியை ஈர்த்திருக்கும்.

கேட்கின்றான்: 'பூக்களின் மணத்தை ஆராய்ந்து, அவற்றிலுள்ள தேனை உண்கின்ற, அகத்தே(உள்ளே) சிறகுகளை உடைய தும்பியே, நான் ஒன்று உன்னைக் கேட்கிறேன், பதில் சொல். மயில் சாயலையும் அழகான வரிசையாய் ஒளிவீசும் பற்களையும் உடைய என் அன்புக் காதலியின் கூந்தலின் இயற்கையான நறுமணம் போல், உன் அநுபவத்தில் நீ கண்டறிந்த மலர்களுக்குள் ஏதேனும் ஒன்றுக்கு உண்டா, சொல்' இதை இயற்கைப் புணர்ச்சியில் 'நலம் பாராட்டல்' என்று கூறும் தொல்காப்பியம்.

இப்பொழுது நம்மாழ்வார் இயற்றிய 'திருவிருத்தத்தில்' ஒரு பாட்டைப் பார்ப்போம்.

'வண்டுகளோ வம்மின்நீர்ப்பூ நிலப்பூமரத்தில் ஒண்பூ
உண்டு களித்துழல் வீர்க்கொன்றுரைக் கியம் ஏனமொன்றாய்
மண்துக ளாடிவை குந்தமன் னாள்குழல் வாய்விரைபோல்
விண்டுகள் வாரும் மலர் உளவோ நும் வியலிடத்தே'

இந்தப் பாட்டின் பொருள் என்ன?

'வண்டுகளே! நீங்கள் நீர்ப் பூக்கள், செடி கொடிகளிலுள்ள அழகிய பூக்கள், நீண்ட மரங்களிலுள்ள பூக்கள் ஆகிவற்றை மணம் மோந்து, தேனைக் குடித்திருப்பீர்கள். நான் ஒன்று கேட்கிறேன் உங்களை.. அழுக்கு மண்ணில் புகுந்து விளையாடிய வராக மூர்த்தியை உங்களுக்குத் தெரியுமா? அவருக்குத்தான் நறுமணம் கமழும் வைகுண்டமும் சொந்தம். அந்த வைகுண்டத்தைப் போல் இனியவள் இப்பெண். இவளுடைய கூந்தலின் நறுமணம், நீங்கள் அநுபவத்தில் மோந்து உணர்ந்த அம்மலர்களுக்கு உண்டா, சொல்லுங்கள்.'

இப்பொழுது உங்களுக்குப் புரிந்திருக்கும். 'குறுந்தொகை'க்கும்,'திருவிருத்த'த் துக்கும் என்ன சம்பந்தமென்று. சங்க காலத்து அகத்துறைப் பாடல்களின் தொடர்ச்சியாகத்தான் பக்தி இயக்கப் பாடல்களை நம்மால் பார்க்க முடிகிறது.

இறையானார் பாடலில் காதலன் ஒரு தும்பியை (வண்டைக் காட்டிலும் தும்பிக்குச் சற்று உயர்ந்த தகுதி உண்டு என்பார்கள்) பார்த்துக் கேட்கிறான். நம்மாழ்வார்ப் பாடலில் வண்டுகள் என்று பன்மையில் அமைந்திருக்கிறது. 'பக்தி' என்ற சொல்லே 'பஜ்' என்ற வேர்ச்சொல்லினின்றும் வருகிறது. 'பஜனை' என்றால் கூட்டமாக வழிபடுவது. வைணவ சமயம் தனிப்பட்டவர்கள் ஈடேறுவதை(individual salvation) வற்புறுத்தவில்லை. முதல் மூவாழ்வார்கள் சந்தித்த வரலாறும் இதைத்தான் சொல்லுகிறது. ஆகவேதான்,' வண்டுகளே' என்று பன்மையில் கேட்கிறான் காதலன்.

குறுந்தொகைப் பாட்டில் அற்புதமான சொல்லாட்சி. திருவிளையாடற் புராண நக்கீரர் இந்தப் பாட்டை இதற்காகவாவது ரஸித்திருக்கலாம். 'கொங்கு தேர் வாழ்க்கை' என்றால், மலர்களை ஆராய்ந்து, நறுமணம் மோந்து, தேனை உண்ணும் வாழ்க்கை என்று பொருள். ஆங்கிலத்தில் 'connoisseur' என்பார்களே அந்த மாதிரி. பொதுவாகப் பூக்கள் என்று அவன் சொல்லுகின்றானே தவிர அவற்றை வகைப்படுத்தி அவன் கூறவில்லை. ஆனால் திருவிருத்தக் காதலன், 'நீர்ப்பூ', 'நிலப்பூ, மரப்பூ என்று வகைப்படுத்திக் கூறுகிறான்.

ஆன்மிகச் சிந்தாந்தத்தில் மூன்று யோகங்கள் கூறப்படுகின்றன. அவை கர்மம், ஞானம், பக்தி இவற்றை தவிர, வைணவத் தத்துவதில் நான்காவதாக ஒரு யோகத்தைச் சொல்வார்கள். அதன் பெயர் பிரபத்தி. இதைச் சரணாகதித் தத்துவம் என்றும் கூறப்படும். நாம் நம்முடைய பணியை முழு சிரத்தையுடன் செய்துவிட்டு, நடப்பது நடக்கட்டும் என்று மனத்தில் எந்தவித ஐயமின்றிப் பலனை இறையவனிடம் ஒப்படைத்து விடுதல்.

இப்பாசுரத்தில் இடம்பெறும், நீர்ப்பூ, நிலப்பூ, மரத்தில் ஒண்பூ ஆகிய மூன்றும் மூன்று யோகங்களைக் குறிக்கின்றன, தலைவியின் கூந்தலில் உள்ள இயற்கை மணம் பிரபத்தி. மற்றைய மூன்று யோகங்களைப் போல் சிக்கலானது இல்லை. இயற்கை மணத்துக்கு எந்தவிதமான பிரயத்னமும் வேண்டியதில்லை. உலகமே இறைவனின் உறைவிடம். இயற்கையும் இறைவனும் ஒரே பொருளைத் தரும் இரு சொற்கள், அதனால்தான் எந்தவிதமான அலங்காரமுமில்லாமல் இருக்கும் கூந்தலின் இயற்கை மணத்தைப் பிரபத்தியுடன் ஒப்பிடுகிறார்கள்.

திடீரென்று ‘ஏனம்’ என்று அவன் வராக அவதாரத்தை ஏன் குறிப்பிட வேண்டும்? அதே சமயத்தில் அழுக்கை விரும்பி வாழும் அவனுக்கு நறுமணம் கமழ்கின்ற வைகுண்டம் சொந்தம் என்கிறார். உலகத்தில் விரும்பத்தகாதது என்று எதுவுமேயில்லை. வைணவத் தத்துவம் இறைவனின் சௌலப்பியத்தை (எளிமை) வற்புறுத்தியது. அதனால்தான் ஒரே மூச்சில் அவதார நிலையையும் (வராகம் = எளிமை) பரம நிலையையும் (வைகுண்டம்) குறிப்பிடுகிறார். வைகுண்டம் போல் இனிமையாக இருக்கும் அவள் மிக இயல்பாக, எளிமையாக, இயற்கை மணத்துடன் இருக்கும் கூந்தலுடன் இருக்கிறாள். இதுதான் அவனுக்கு உகந்த விஷயம்.

‘ஈசன் வானவர்க்கு அன்பன் என்றால்
தேசமோ திருவேங்கடத்தானுக்கு?’

(திருவாய்மொழி)

‘இறைவன் வைகுண்டத்தில் இருக்கிறான் என்பதை விட இங்கு, இந்த மண்ணில், எனக்குச் சுலபனாக திருப்பதியில் இருக்கிறான் என்பதுதான் அவனுக்கும் பெருமை. எனக்கும் பெருமை’. ஆழ்வார் கூறுவது இன்றையத் திருப்பதி இல்லை, அவர்காலத்திய திருப்பதி!

parthasarathyindira@gmail.com ■

# தெய்வ தூதனின் கானம்...

இந்த ஆண்டு புக்கர் பரிசு பால் லிஞ்ச் (Paul Lynch)ன் Phorophet Song நாவலுக்கு தரப்பட்டுள்ளது. தாமஸ் மூர் கண்ட இலட்சிய நோக்கில் அமைந்த முழுமையான கற்பனை கொள்கை அடிப்படையில் அமைந்த (Utopia) உட்டோபியா வகை நாவல்களை போல இது, Dystopian novel. கொடும் பஞ்சம், ஒடுக்கப்பட்ட மக்களின் நம்பிக்கை இன்மை, கையறு நிலை இவைகளை குண நலன்களாக கொண்டது Dystopian நாவல். (Phorophet Song) தெய்வ தூதனின் கானம்.. பழமைவாத மக்களாட்சி தத்துவத்தில் அமைந்த அரசுக்கு மாற்றாக, உருக்கொள்ளும் எதேச்சதிகார பாசிச கொள்கைக்கு எதிரான ஒரு கலகக்கார தாயின் குரல் இந்த நாவல். பால் லிஞ்ச் பாசிசம் என்ற தொற்று அறியப் படாமல் பரவுதலை பின்புலமாக கொண்டதும் பத்திகள் பிரிப்பில்லா புதுமை வடிவில் அமைந்ததுமானது இந்த நாவல். மேற்கத்திய இலக்கிய உலகு இம்முறை ஐரிஷ் இலக்கிய உலகம் எழுப்பும் தனிமனிதக் குரலை செவிமடுத்து உள்ளது வரவேற்கதக்கது. புக்கர் பரிசை வென்றவைக்கும் நெடும்பட்டியல், குறும்பட்டியலில் இடம்பெற்ற நாவல்களுக்கும் கணையாழியின் வாழ்த்துக்கள்.





# விற்பனையில்!












வாழும் தலைமுறையும் வரும் தலைமுறைகளும் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் 1965 ஜூலை முதல் 1970 ஜூலை வரையிலான கணையாழி இதழ்கள் அப்படியே அச்சுப் பிசகாமல் 5 தொகுதிகளாக 2606 பக்கங்களில்.

**ஒவ்வொரு தொகுதியும் ரூ.500**

Kanaiyazhi padaippakam எனும் பெயரில் மணி ஆர்டரோ அல்லது காசோலையோ:
கே 502, விக்டோரியா டவர்ஸ், # 37, இராஜிவ் காந்தி சாலை [OMR],
கழிப்பட்டூர், தமிழ்நாடு -603103
எனும் முகவரிக்கு அனுப்பிப் பெற்றுக் கொள்ளலாம். அல்லது வங்கியில் நேரடியாகச் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

வங்கியில் நேரடியாகச் செலுத்த -
Name of the Account : Kanaiyazhi padaippakam
Indian Overseas Bank, Valmiki Nagar Branch[1472]
Current Account No. 147202000000946
NEFT- IFSC Code - IOBA0001472

கணையாழிப் படைப்பகம் வெளியீடு